# தி. தி. தேவஸ்தானம் - ஒரு கண்ணோட்டம்

1) கோயில்கள் — 42

2) தங்கு வசதிகள் :

a) இலவச அறைகள் 1102

b) வாடகை அறைகள் மற்றும் காட்டேஜுகள் 812

c) விருந்தினர் விடுதிகள் 4

3) உணவு விடுதிகள் 5

4) மருந்தகங்கள், மருத்துவ மனைகள் 7

5) கல்வி நிறுவனங்கள் :

a) வடமொழி மற்றும் சமயக் கல்லூரிகள் 5

b) கலை மற்றும் விஞ்ஞானக் கல்லூரிகள் 5

c) நுண்கலை மற்றும் தொழிற்நுட்பக் கல்லூரிகள் 4

d) பள்ளிகள் 8

6) அறநிலைய நிறுவனங்கள் 2

7) பூந்தோட்டங்கள் (312 ஏக்கர்) 28

8) மாட்டுப்பண்ணை

a) தற்போது இருக்கும் கறவை மாடுகள் 439

b) வேளாண்மை :

உழுதப்பெற்றன ஏக்கர் 150

உழுதப்பெருதன ஏக்கர் 110

9) காட்டு நிலப்பரப்பு :

(26.75 சி.மீ. பரப்பளவு) ஏக்கர் 6610

10) தீர்த்தங்கள் (புராணங்களின்படி 1191) 16

11) அணைகள் 2
(1 கட்டப்பட்டுள்ளது: 2வது கட்டப் பட்டு வருகின்றது)

12) அரும் பொருட்காட்சி நிலையங்கள் 2

13) துறைகள் 58

14) அலுவலர்கள் 5392
(எல்லாப் பிரிவினரையும் சேர்த்து)

15) அச்சகம் 1

16) வெளியீடுகள்

a) மாதவெளியீடு (5 மொழிகளில்) ஸப்தகிரி

b) வருடவெளியீடு பஞ்சாங்கம்

c) 1979-80ல் வெளியிடப்பட்ட சமய நூல்கள் மற்றும் இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் ஆதரவில் வெளியிடப்பட்ட நூல்கள் எண்ணிக்கை 65

17) இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா நிலையங்கள் 14

18) தகவல் தொடர்பு நிலையங்கள் 17

19) திருமண மண்டபங்கள் 9

20) வருகைபுரிந்த யாத்திரிகர்கள் :

a) 1979-80 இல் 61,10,023

b) 1-4-80 முதல் 30-9-80 வரை 38,54,469

c) அக்டோபர் 80இல் 6,62,486

21) மொத்த வருவாய் பல்வேறு வகைகளில் :

| | ரூ. பை |
|---|---|
| a) 1979-80 இல் | 15,78,31,137-00 |
| b) 1-4-80 முதல் 30-9-'80 வரை | 9,88,86,843-00 |
| c) அக்டோபர் '80ல் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் வருமானம் | 1,14,28,516-00 |



தையொரு திங்களுந் தரைவிளக்கித்
தண்மண்டலமிட்டு மாசிமுன்னாள்
ஐயநுண்மணற்கொண்டு தெருவணிந்து
அழகினுக் கலங்கரித் தனங்கதேவா
உய்யவு மாங்கொலோ வென்றுசொல்லி
உன்னையு மும்பியை யுந்தொழுதேன்
வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே.

*காமதேவனே! தைமாதம் முழுவதும் நீ எழுந்தருளவேண்டிய இடத்தைச் சோதித்து (மண்டல பூஜைக்காக) குளிர்ந்த (அழகிய) மண்டலாகாரத்தை இட்டு மாசிமாதத்தின் முதற்பக்ஷத்தில் அழகிய சிறியமணல்களினால் நீ எழுந்தருளும் வீதிகளை அழகுண்டாவதற்காக நன்றாய் அலங்கரித்து காமனைத் தொழுதால் நாம் உஜ்ஜீவிக்கலாகுமோ? எனக்கருதி (காமனாகிய) உன்னையும் உன் தம்பியான சாமனையும் வணங்கா நின்றேன்; (ப்ரதிகூலர் பக்கலில்) உக்கிரமானதும், நெருப்புப் பொறிகளை உமிழா நிற்பதுமான ஒப்புற்ற திருவாழியாழ்வானை திருக்கையில் அணிந்துள்ள திருவேங்கடமுடையானுக்கு என்னை கைங்கர்யம் பண்ணும்படி கல்பிக்கவேணும். (ஏ. ஈற்றசை)*

**[ நாச்சியார் திருமொழி ]**



# ஸப்தகிரி



ஜனவரி 1981

மலர் 11
இதழ் 8

தனிப்பிரதி 50 காசு

வருடச் சந்தா ரூ. 6

*சிறப்பாசிரியர் :*
**திரு. பி. வி. ஆர். கே. பிரசாத்,**
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர் :*
**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

*அச்சிடுபவர் :*
**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

**முழு விவரங்களுக்கு:**
EDITOR
'Sapthagiri'
Alipiri Road,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டையில் : சங்கராந்தி வருகை

[அண்மையில் ஸப்தகிரியில் வெளியிடப்பட்ட "வேதமும் வேங்கடமும்" எனும் கட்டுரையினைப்பற்றிய திரு. என். எஸ். தேவநாதாசாரியார் அவர்களால் எழுதப்பெற்ற மறுப்பு கட்டுரை ஒன்று அடுத்த இதழில் வெளியிடப்படும்]

# ஆசிரியர்க்கு.....

அண்மையில் ஸப்தகிரியில் பிரசுரிக்கப்பட்ட டாக்டர். எஸ். சங்கரநாராயணன் அவர்கள் எழுதிய ''வேதமும் வேங்கடமும்'' என்ற கட்டுரையைப் படித்துப் பார்த்த பிறகு கீழ்க்கண்ட கருத்துக்களை எழுதியுள்ளேன்.

திருமலை ஏழுமலைகளாக உள்ளது என்பதும் அதற்கு சேஷாத்ரி, கருடாத்ரி முதலிய ஏழுபெயர்கள் இருப்பதும் பண்டித, பாமர விபாக மறஒப்புக்கொண்டவிஷயம். கட்டுரை ஆசிரியர் வேதக்கதையை எடுத்து அதை திரு ஆதிவராஹப் பெருமான், திருவேங்கடமுடையான் இவர்கள் திருமலையில் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ளதற்குச் சம்பந்தப் படுத்தி எழுதியுள்ளது போற்றத் தக்கதாக உள்ளது.

எனினும் அவர் எழுதியுள்ள கருத்துக்கள் முரண்பாடுள்ளவை.

முதன் முதலில் கோயிலுக்கு வரும் வருவாய் விஷயம் பற்றி எடுத்துக் கொள்வோம்.

திருவேங்கடமுடையான் திருக்கோயிலுக்கு வருவாய், 1960-ம் வருடத்திற்குப் பிறகுதான் இம்மாதிரி கோடிக்கணக்கான ரூபாய் வருகிறது. அதற்கு முன் உண்டியல்மூலம் சில லக்ஷரூபாய்களே வருவாயாக வந்து கொண்டிருந்தது. திருவரங்கம் கோயிலுக்கு இறையில் நிலங்கள் மூலமாகவும் (சேர, சோழ, பாண்டிய மற்றும் விஜயநகர மன்னர்களால் அளிக்கப்பட்டவை) பொது மக்கள் அளிக்கும் காணிக்கைகள் மூலமும் நிறைய வருவாய் வந்து கொண்டிருந்த சமயத்தில், திருவேங்கடத்தில் போக்குவரத்து மற்றும் தங்கும் வசதிகள் குறைவினால், திருவரங்கம், மற்றும் சோழ நாட்டிலுள்ள விண்ணகரங்கள் பலவற்றிற்கு வந்துகொண்டிருந்த வருமானம் அந்தந்த காலத்தில் திருமலைக்கு வந்திருக்க நியாயமில்லை.

உதாரணமாகத் திருவரங்கம் பெரிய கோயிலில் நெய்க்கிணறு ஒன்று 15 அடிக்கு மேல் நீள அகல உயரங்களுக்குக் குறையாமல் இருந்து கோயில் உபயோகத்திற்குப் பயன் படுத்தப் பட்டுள்ளது. நான்கைந்து நெற்களஞ்சியங்கள் 30 அடி உயரத்துக்குமேல் பல அடுக்குகளுடன் கட்டப்பட்டு (இன்றைக்கும்உள்ளன) அவற்றில் நெல் முதலான தான்யங்கள் சேமிக்கப்பட்டு உபயோகப் படுத்தப் பட்டுள்ளன. அந்தக் கோயிலின்கண் உள்ள மற்றக் கோயில்களும் நன்கு பராமரிக்கப்பட்டுள்ளதன் மூலமும், கோயிலின் நடந்து வந்துள்ள/வந்து கொண்டிருக்கின்ற உத்ஸவங்கள் மூலமும், கோயிலின் பரப்பளவின் மூலமும், இன்றைக்கும் திருவரங்கம் பெரிய கோயிலிலுள்ள திருவாபரணங்கள், தங்க, வெள்ளிப் பாத்திரங்கள் மூலமும் கோயிலின் செல்வச்சிறப்பையும், வருமானத்தையும் நன்கு உணரலாம். எனினும்இன்றையவருமானம், அரசின்சட்டத்திட்டங்களினால் நிலத்தின் மூலம் நிறைய வந்த வருமானம் குறைவு பட்டது.

இரண்டாவதாக "தேவதா நிஷ்கர்ஷம்" செய்யும் விஷயத்தில் கட்டுரை ஆசிரியர் குழப்பியுள்ளார்.

வேதத்தில் சொன்ன விஷயத்தைப் பிரமாணமாக எடுத்துக்காட்ட இதிஹாச, புராணங்களைக் கொண்டுதான் செய்யமுடியும். அவ்வாறு காட்டாமல் தன் கருத்தாக யஜுர் வேதக் கதையைத் திருமலைக் கோயிலுக்கு சம்பந்தப் படுத்துவது சரியல்ல.

தலபுராணத்தாலும், மற்ற புராண பிரமாணங்களாலும், ஸ்வயம் வ்யக்த க்ஷேத்ரமாகக் கருதப்படுகிற திருமலையை, ஒரு முனிவர் இக்கோயிலை நிறுவியதாக ஆசிரியர் ஏன் ஊகிக்கிறார் என்று தெரியவில்லை.

மேலும் திருவேங்கட மாமலைத் தொடரின் பெயர்கள் யாவும் விஷ்ணு சம்பந்தப்பட்ட பெயர்களாயிருப்பதாலும், சைவ, வைணவ விவாதத்திற்கு முற்றுப் புள்ளி வைத்து மாபெரும் ஆசார்யரான ஸ்ரீ ராமானுஜர் திருவேங்கடமுடையானுக்குத் திருவாழி திருச்சங்கு அளித்து அவனை விஷ்ணுதான் என்று நிரூபித்துக் காட்டியதிலிருந்தும், இவருக்கு முன்பே ஆழ்வார்கள் பாடல்களாலும், இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் பாடியிருப்பதிலிருந்தும், மற்றும் பண்டைய தமிழ் நூல்களிலிருந்தும், திருவேங்கடமுடையான் விஷ்ணுதான் என்று உறுதியாக்கப் பட்டுள்ளது.

அன்று முதல் இன்று வரை எல்லா ஜனங்களாலும், யாத்திரை ஆரம்ப முதல் முடிவுரை "கோவிந்த" சப்தத்துடன் அழைக்கப்படுவதாலும், திருவேங்கடமுடையான் திருமார்பில் அவன் திருமேனியோடு திருமேனியாக "அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கை உறை மார்பா" என்று ஆழ்வார் அருளியபடி அர்ச்சாவதாரத்திலும் மஹாலக்ஷ்மீ எழுந்தருளி யிருப்பதைச் சேவித்த பிறகும் திருவேங்கடமுடையானின் திருவுருவத்தைப் பற்றிய சர்ச்சை எழ வேண்டிய அவசியமில்லை.

எல்லாவற்றிற்கும் மேலாகக் கட்டுரை ஆசிரியராலேயே இதர தேவதைகள் விஷ்ணு ரூபமான யக்ஞத்திற்கு அங்கங்கள் என்று ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. அங்ஙனமிருக்க மற்றதேவதைகள் யக்ஞத்தில் உரிமை கொண்டாட முடியும் என்று ஆசிரியர் கருதுவதற்கு இடமேயில்லையே. ஏன் அந்த விஷயத்தைக் குழப்பி யிருக்கிறார். அங்கமாயிருப்பவை அங்கியோடு போட்டியிட முடியவே முடியாது. மேலும் முருகனும், பராஸக்தியும் இந்த யக்ஞமூர்த்தி விஷயத்தில்தலையிடுவதற்குச் சம்பந்த மற்றவர்களல்லவா? இந்த விஷயத்தை எடுத்துக் குழப்பாமல் தம் ஆராய்ச்சியில் அவருக்குத் தோன்றின வேதக் கதையைச் சொல்லி, கட்டுரையை முடித்திருப்பாரானால் நன்றாயிருந்திருக்கும்.

டி. எஸ். கிருஷ்ணசுவாமி,
சென்னை-24.

# ஸ்ரீ ஆண்டாள் திருமொழி

திரு. கே. பி. துரைசாமி

ஆண்டாள் தனது பருவம் வளருந்தோறும் ஞான பக்திகளும் உடன் வளரப் பெற்று, தனக்கு ஏற்ற காதலனாகக் கருதிய கடல்வண்ணன் விஷயமான வேட்கை மிஞ்சியவளாகி இனி அவனை ஒரு கணப்பொழுதுங் கூடாதிருக்கப் பொறாமல், கண்ணனது பிரிவை யாற்றாத கோபஸ்த்ரீகள் போலத் தானும் நோன்பு நோற்று உயிர் - தரிப்பவளாயினாள். யாரை நினைந்து நோன்பு நோற்பது? பிரிந்த தலைவன், தலைவியர் நோற்பதாயினும், நோவதாயினும் காமனையே பற்றுவர். எனவே நம் சுரி குழல் கோதை காமனை யிரந்து, கண்ணனைக் கடி மலர்க் கணையால் உறுத்த வேண்டுகிறான்.

வெள்ளைநுண் மணற்கொண்டு
தெருவணிந்து
வெள்வரைப்பதன் முன்னம் துறை
படிந்து
முள்ளுமில்லாச் சுள்ளி யெரிமடுத்து
முயன்றுன்னை நோற்கின்றேன்
காமதேவா
கள்ளவிழ் பூங்கணை தொடுததுக்
கொண்டு
கடல்வண்ண னென்பதோர்
பேரெழுதிப்
புள்ளினை வாய்பிளந் தானென்ப
தோர்
இலக்கினிற் புகவென்னை யெய்கிற்றியே

மத்தநன் னறுமலர் முருக்கமலர்
கொண்டு
முப்போது முன்னடி வணங்கி
தத்துவமிலியென்று நெஞ்செறிந்து
வாசகத்தழித்து உன்னை வைதிடாமே
கொத்தலர் பூங்கணை தொடுத்துக்
கொண்டு
கோவிந்த னென்பதோர் பேரெழுதி
வித்தகன் வேங்கடவாண னென்னும்
விளக்கினிற் புகவென்னை விதிக்
கிற்றியே.

தான் நோன்பு நோற்கும் மாதிரியையும், அதன் கருத்தையும் கூறிக் காமனது கருணையை யிரக்கிறாள் ஆண்டாள். தத்துவமிலி என்று நெஞ்செறிந்து வையாதவாறு காமன் தன்னைக் காத்துக் கொள்ள வேணுமாய் ஆண்டாள் பிரார்த்திப்பது அறிந்து மகிழத்தக்கது. பண்டொருநாள் பார்வதிக்குப் பரிந்து பரமசிவன்மேல் பாணத்தை யெய்தியப் பரமன் அழற்கண் விழித்து மன்மதனை நீறாக்கினான். பின்னர், இரதிதேவியின் அரற்றலுக்கிரங்கி சாபத்தை மாற்றியருளினன். அதெவ்வாறாயினும் காமன் அங்கமிலியாகினன். இப்பொழுது ஆண்டாள் தன் வேண்டுகோளை நிறைவேற்றாது போயின் தத்துவமிலி என்று அவனை அழைத்து விடுவாள் போலப் பயமுறுத்துகிறாள். கண் திறந்து அங்கமிலியாக்கினன் பரமன் நெஞ்செரிந்து தத்துவமிலியாக்குவள் கோதை. பாவம் : மன்மதன் பாடுதான் என்னே.

அவரைப் பிராயந் தொடங்கி என்றும் ஆதரித்தெழுந்த என் தடமுலைகள் துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத் தொழுது வைத்தேன். ஒல்லை விதிக்கிற்றியே. கண்ணனிடத்தே பிறந்த காதலே தன்னுடல் வளர்ச்சிக்கும் உயிரிருக்கைக்கும் காரணமாயமைவது போன்ற...... ஆதரித்தெழுந்த என் தடமுலைகள் என்கிறாள். அண்ணலை அடைவதெண்ணி அகன்று வளரும் அவள் அங்கங்கள், மண்ணினைப் பேணும் மானிடரைத் தழுவ வேண்டுமென்னும் பேச்சு ஏற்படின் தான் உயிர் வாழாள் என்பதை சொன்னயமும் பொருள் நயமும் செறிந்த ஓர் பாசுரத்தால் விளக்குகிறாள்.

வானிடை வாழுமவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்தவலி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வ
தொப்ப
ஊனிடை யாழிச்சங்குத் தமர்க்கென்று
உன்னித் தெழுந்தவென் தட
முலைகள்
மானிடர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய் மன்
மதனே.

“வேள்விப் பொருளினையே புதுநாயின் முன் மென்றிட” வைப்பது போலாகும் இத்தேவியை மண்ணவர்க்கீதல். இனி, இந்தப் பாசுரத்தில் கூறிய உவமை பொருந்துமாறு வேள்விக்கென மறையவர் உபகரணங்கள் யாவற்றையுஞ் சேர்த்து ஆற்றுகின்றபோது அவியைப் பாத்திரமறிந்தே பெய்வர். நரியும், நாயும் அதையுண்ண அவர் சகியார். மறையவர் சேகரிக்கும் பொருளும், விண்டுசித்தர் கண்டெடுத்த கோதையும் இங்கு உவமித்துக் கையாளப்பட்டது குறிப்பிடத்தக்கது. பாத்திரமறிந்து அவியை மறையவர் பெய்தல் வேண்டுவது போலத் தன் ஆத்திர மறிந்தும் தன் வதுவை விண்டுசித்தர் செய்ய வேண்டுமே என்னும் பயம் அவட்கில்லாமற் போகவில்லை. இதுகொண்டே ‘மானிடவர்க் கென்று பேச்சுப்படில்’ என்று ஆண்டாள் கூறுகிறாள்.

“வாயுடை மறையவர் மந்திரத்தால் மன்மதனே, உன்னை வணங்குகின்றேன். தேச முன்னளந்தவன் திரிவிக்கிரமன் திருக்கைகளாலென்னைத் தீண்டும் வண்ணம் சாயுடை வயிறு மென் தடமுலையும் தரணியில் தலைப்புகழ் தாக்கிற்றியே” என்று கூறுவது தானடைய விரும்பும் பெரியோனது புகழையும் வன்மையையும் காட்டித் தன் காதலின் பெருமையையும் தோற்றுவிப்பதற்காகும்.

ஆண்டாள் செய்து கொள்ளும் இத்துணை முறைபாட்டிற்கு செவி சாய்க்காது இருந்து விடுவானாகில் மன்மதன் பெருத்த பாவத்தைச் செய்தவனாய் விடுவான். ஏனெனில், கண்ணனை யடைந்து வாழாத பக்ஷத்தில் கோதை அழுதழுது அலமருவாள்.

மொழிகளின் எளிமையாலும், பொருளின் செம்மையாலும், கருத்தின் கண்ணியத்தாலும், ஆண்டாள் நம்முள்ளத்தை யள்ளிக் கொள்ளுகிறாள். மண்ணையும், மண்ணைச் சேர்ந்தவரையும், சார்ந்த எதையும் வெறுத்து இறைவனை மாத்திரம் பற்றிய காதல் எத்துணை மாசற்று விளங்குகிறதென்பது எவரும் கண்டு கொள்ளலாம்.





# கோவலன் எம்பிரான்

திரு. கி. வா. ஜகந்நாதன்,
சென்னை.

மனிதனுக்கு இன்பமும் துன்பமும் கலந்து வருகின்றன. முன்னைப் பிறப்பில் செய்த புண்ணியத்தின் பயனாக இன்பத்தையும், பாவத்தின் பயனாகத் துன்பத்தையும் அநுபவிக்கிறான். இன்பத்தை விழைவதும் துன்பத்தை வெறுப்பதும் அவனுடைய இயல்பு. ஆயினும் இந்தப் பிறவியில் துன்பமே மிகுதியாக இருக்கிறது.

''பிறந்தோர் உறுவது பெருகிய
துன்பம்''

என்று மணிமேகலை சொல்கிறது.

இன்பத்தை மிகுதியாக்கவும், துன்பத்தை ஒழிக்கவும் அவன் முயல்கிறான். ஆனால் அவனுடைய முயற்சி ஒன்றினால் மட்டும் அதைச் செய்ய முடிவதில்லை. வறுமையால் அல்லல் படும் போது அதைப் போக்கிக் கொள்ளச் செல்வரை நாடுகிறான். பசியினால் துன்புறும்போது அன்னம் இடுவாரைத் தேடிச் செல்கிறான். பிணியினால் வருந்தும் போது மருத்துவரை அணுகுகிறான். அவர்களும் மனிதர்களாகையால் அவனுடைய இன்னல் முழுவதையும் அவர்களால் போக்க முடிகிறதில்லை. சர்வசக்திமானாக உள்ள ஒருவனை அடைவதால் அவனுடைய எண்ணம் கைகூடும். அறிவுடையவர்கள் அத்தகைய ஒருவனை நாடி அடைந்து தம் துன்பங்களைப் போக்கிக் கொள்கிறார்கள்; இன்பத்தையும் அடைகிறார்கள்.

அந்தச் சர்வ சக்திமான் யார்? அவனே பரம்பொருள். அவன் அடியவர்களின் துன்பங்களை நீக்குவதற்காகப் பல திருவவதாரங்களைச் செய்திருக்கிறான்.

கண்ணபிரானாக அவதாரம் செய்த போது பல அசுரர்களின் கொட்டத்தை அடக்கி மக்களுக்கு நலம் செய்திருக்கிறான். ஓர் அசுரன் குருந்த மரமாக நின்றான், மற்றும் ஒருவன் கன்றாக வந்தான். ஒரே கல்லில் இரண்டு கனிகளை வீழ்த்துவது போலக் கன்றாக வந்த அசுரனை எடுத்துக் குருந்த மரத்தின்மேல் வீசி இருவரையும் அழித்தான்.

குருந்த மரமாக வந்த அசுரன் பார்ப்பதற்கு அழகாக இருந்தான் பாம்பு பார்ப்பதற்கு அழகாக இருந்தாலும் அதனால் விளையும் துன்பத்தை எண்ணி அதை அடித்துவிடுகிறோம். பூந்தாது மலிந்து பரவிய மலர்களையுடைய குருந்த மரமாக அசுரன் இருந்தாலும், அதன் அழகைக் கண்டு மயங்காமல் அதை அழித்தான் பகவான். ஆயர் தலைவனாக இருந்த எம்பெருமானாகிய கோபாலன் அவ்வாறு செய்ததனால் ஆயர்கள் இன்பம் அடைந்தனர்; பிற மக்களும் நலம் பெற்றனர்.

கொங்கு அலர்ந்த மலர்க்குருந்தம்
ஒசித்த
கோவலன்; எம்பிரான்.

அவன், 'எம்பிரான்' என்று அன்பர்கள் உரிமை கொண்டாடிப் போற்றும் பெருமான்.

அவன் கருணை பொழியும் தாமரைக் கண்களை உடையவன். திருப்பாற் கடலில் துயில் கொண்டருளுகிறான். சங்குகள் தங்கி முழங்கும் பெரிய கடல் அது.

சங்கு தங்கு தடங்கடல் துயில்
கொண்ட தாமரைக் கண்ணினன்.

பாற்கடலில் அறிதுயில் கொண்டிருந்தாலும் அடியவர்கள் தன்னை அணுகும்போது அவர்களைக் கடாட்சித்து அருள் வழங்கும் பேராளன் அவன்.

அவன் பெரு வீரம் உடையவன். அடியவர்களுக்கு எத்தகைய இடர் வந்தாலும் போக்கும் பேராற்றலைப் படைத்திருக்கிறான். கொக்காக வந்த அசுரனைப் பற்றி வாயைக் கிழித்து அழித்தவன். கோபத்தோடு வந்த அவனை ஒரு கணத்தில் வாய் பிளந்து அழியச் செய்தவன்.

பொங்கு புள்ளினை வாய் பிளந்த.

அவன் கண்ணனாகத் திருவவதாரம் செய்தாலும் அவன் என்றும் உள்ளவன்; மிக மிகப் பழையவன். பழையவர்களாக நெடுங்காலம் இருப்பவர்களும் ஒரு காலத்தில் அழிந்து போவார்கள். அவனோ என்றும் அழியாமல் எல்லாப் பழையவர்களுக்கும் முன் உள்ள பழையவனாக விளங்குகிறான்.

புராணன்.

அந்தப் பெருமான் வைகுண்டவாசியாக இருந்தாலும் தன்னுடைய

அடியவர்கள் அணுகிப் பணிந்து வழிபடும் பொருட்டுஇந்த நிலவுலகத்துக்கே வந்து எழுந்தருளி யிருக்கிறான். நித்திய சூரிகளும் முக்தர்களும் உள்ள திருவைகுந்தத்தில் எழுந்தருளியிருப்பதோடு அவன் நிற்பதில்லை. தீனர்களாகிய மக்கள் வாழும் உலகுக்கே வந்து அவர்களுடைய பக்தி பரவசமான வழிபாட்டை ஏற்று அவர்களுக்கு அருள் வழங்குவதிலே பெரு விருப்பம் உடையவனுதலின், இங்குள்ள திருப்பதிகளில் நித்திய வாசம் செய்கிறான். அவ்வாறு அவன் எழுந்தருளியிருக்கும் இடங்களில் ஒன்று திருவேங்கடம். பல திருப்பதிகள் இருந்தாலும் அது சிறந்த தலமாக நிலவுவதால் அதைத் திருப்பதி என்றே அடையின்றிச் சொல்லும் வழக்கு உண்டாகி விட்டது.

அந்தத் திவ்ய தேசம் எம்பெருமானுடைய சாந்நித்தியத்தினுல் வளம் கொழிக்கிறது. நீர் வளம் நிரம்பிய இடம் அது. ஊற்றிலிருந்து பொங்கி வரும் நீர் நிலைகள் பலவற்றை உடையது. மலையில் அங்கங்கே பல சுனைகள் இருக்கின்றன. அவற்றில் கயல் மீன்கள் எதற்கும் அஞ்சாமல் குழந்தைகளைப் போலத் துள்ளி விளையாடுகின்றன. குருதி வளம் பெற்றமையால் அவை செந்நிறம் பெற்று விளங்குகின்றன.

இவ்வாறு மீன்கள்கூட அச்சம் அறியாது திளைக்கும் சூழல் திருவேங்கடம். அறிவில்லாத மீன்களே திளைக்கும் இடம் என்றால் அறிவு படைத்த மனிதன் அங்கே சென்றால் வேறிடத்தில் பெறாத இன்பத்தைப் பெற்று நிற்பான் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

"இத்தகைய திவ்ய தேசத்தை, நீயும் அடைந்துஇன்பம் பெறுவாய்" என்று தம் நெஞ்சை நோக்கிச் சொல்கிறார் திருமங்கை ஆழ்வார்.

பொங்கு நீர்ச்
செங்கயல் திளைக்கும் சுனைத்
திருவேங்கடம் அடை நெஞ்சமே

'என்றோ ஒரு நாள் குருந்தம் ஒசித்துப் புள்ளினை வாய் பிளந்து மக்களுடைய அல்லலைப் போக்கியவன்; என்றோ நடந்த கதை அது; அதைச் செய்தவன் பழங்காலத்தில் இருந்தவன் என்று எண்ணாதே; இன்றும் அடைபவர்களுக்கு அருள் புரிவதற்காகத் திருவேங்கடத்தில் நம் கண் காண எழுந்தருளியிருக்கிறான். ஆதலால் அவனை அடைந்து சரண் புகுவாயாக!' என்று உபதேசிக்கிறார் ஆழ்வார்.

கொங்கு அலர்ந்த மலர்க்குருந்தம்
ஒசித்த கோவலன், எம்பிரான்,
சங்கு தங்கு தடங்க டல்துயில்
கொண்ட தாமரைக் கண்ணினன்,
பொங்கு புள்ளினை வாய்பி ளந்த
புராணர் தம்இடம், பொங்குநீர்ச்
செங்க யல்திளைக் கும்சு னைத்திரு
வேங்க டம்அடை நெஞ்சமே.

'என் நெஞ்சே பூந்தாது விரிந்த மலர்களை உடைய குருந்த மரத்தை ஒடித்து அழித்த கோபாலன், எமக்குப் பேருபகாரன், சங்குகள் தங்கிய விசாலமான திருப்பாற்கடலில் துயில் கொண்ட தாமரை போன்ற கண்ணை உடையவன், கோபத்தால் பொங்கி வந்த கொக்கு வடிவம் கொண்ட அசுரனை வாய்பிளந்துஅழித்த பழைய பெருமான்; அத்தகையவன் நித்திய வாசம் செய்யும் திவ்ய தேசமும், பொங்கி வரும் செம்மையான கயல் மீன்கள் விளையாடும் சுனைகளையுடையதுமாகிய திருவேங்கடத்தை அடைந்து அவனை வழிபடுவாயாக!

[கொங்கு—பூந்தாது; தேனும் ஆம். அலர்ந்த—பரவிய. ஒசித்த—ஒடித்து அழித்த. தடங்கடல்—விசாலமான பாற்கடல். பொங்கு—கோபத்தால் பொங்கிய. புள்—கொக்காக வந்த பகாசுரன். புராணர்—பழையவர். தம்: சாரியை. முதியவர்களைக் கண்டால் மரியாதை காட்டி வழங்குவது வழக்கம். பகவான் மிகப் பழையவன் என்ற நினைப்பு வந்தவுடன் 'புராணர்' என்று பன்மை வாசகத்தால் சொன்னார். பொங்கு—ஊற்றுக் கண் இருப்பதனால் மழை பெய்யாமலே பெருகிப் பொங்கும். திளைக்கும்—மகிழ்ந்து விளையாடும். பறவைகளாலும் மக்களாலும் தீங்கின்றித் திளைத்தன. அஹிம்சையே நிரம்பிய சூழல் இது. எம்பெருமான் உள்ள இடத்தில் கயல் மீன்களும் இன்னலின்றித் திளைக்கின்றன என்றதனால் மக்கள் பெறும் இன்பம் இன்னும் மிகுதியானது என்பது குறிப்பு. நெஞ்சமே: ஏகாரம், விளி.]

திருவேங்கடமுடையானை அடைந்து சரண் புகுந்தால் துன்பம் நீங்கி இன்பம் பெறலாம் என்பது கருத்து.

பெரிய திருமொழியில், முதல் பத்தில், 8-ஆம் திருப்பதிகத்தில் உள்ள முதற்பாட்டு இது.



## பக்தியின் வேகம்

சூரியனின் ஒளிப்பிழம்பைச் சிறிதுநேரம் உற்றுப் பார்த்த பிறகு, எங்கு திரும்பிப் பார்த்தாலும் அந்த ஒளிப்பிழம்பே தென்படும். அதுபோல அல்லும் பகலும் பகவானையே சிந்தித்துக் கொண்டிருப்பவர்கள் அவரையே எங்கெனும் காண்கிறார்கள். பக்தியின் வேகம் அத்தகையது.

—ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.



# பாவை நோன்பு

பாலாதாஸன்
சூர்யனார் கோயில்.

"நான் இன்ன தரும காரியங்களைச் செய்வேன் நான் இன்ன அதருமமான செயல்களைச் செய்யமாட்டேன்" என்று மனத்தில் உறுதி கொண்டு அதை வாக்கினாலும், உடலினாலும் எள்ளளவும் தவறாமல் நிறைவேற்றுவதே "நோன்பு". நோன்பையே பெரியோர் விரதமென அழைப்பர். பாவை, அதாவது கன்னியர்கள் மேற்கொள்ளும் விரதமே "பாவை நோன்பு" எனப்படும் விரதமாகும். மார்கழி மாதம் முழுவதும், சிறப்பாகத் திருவாதிரை நாளிலும், அதிகாலையில் நீராடி, தெய்வீகப் பாவையைக் குறித்து நோற்கப்படும் "பாவை நோன்பு" சோழ, பாண்டிய நாடுகளுள்ளிட்ட தமிழ்நாடு முழுவதும் நோற்கப்படும் நோன்புகளுள் முதன்மையாக விளங்கியது. இன்றும், சேர நாடான மலையாள தேசத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் சகல கன்னிகைகளாலும் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. அவர்கள் பொழுது விடிவதற்கு முன்பே புறப்பட்டு, வீடு தோறும் நின்று, அங்குள்ளவர்களையும் அழைத்துக் கொண்டு, பாடிக்கொண்டே குளத்திற்குப் போய், நீரில் நின்றபடியே ஒரு விதமான தாளத்தை தண்ணீரில் அடித்துக் கொண்டேஸ்நானம் செய்து உதயத்திற்கு முன்பே வீடு திரும்புவார்கள். இவ்விரதமே ஆண்டாள், மாணிக்கவாசகர்-இவர்கள் காலத்தில் நமது சோழ, பாண்டிய நாடுகளிலும் அநுஷ்டிக்கப்பட்டு வந்தது.

'மார்கழி நீராட என்றதொரு வியாஜத்தைக் கொண்டு நோன்பு என்ற ஒரு வியாஜத்தாலே எம்பெருமானுக்கு ஆட்செய்வதே பரம புருஷார்த்தம்' என்பதைத் திருப்பாவையின் கருத்தாக அருளினார் பெரியவாச்சான்பிள்ளை.

ஆண்டாளின் திருப்பாவையின் முதல் பாசுரத்தைப் பார்ப்போம்.

"மார்கழித்திங்கள் மதிநிறைந்த
நன்னாளால்
நீராடப்போதுவீர்! போதுமினோ,
நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச்
சிறுமீர்காள்
கூர்வேல் கொடுந்தொழிலன்
நந்தகோபன்குமரன்
ஏரார்ந்தகண்ணி யசோதை
இளஞ்சிங்கம்
கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்
போல்முகத்தான்
நாராயணனே, நமக்கே பறை
தருவான்
பாரோர் புகழ்ப் படிந்தேலோ
ரெம்பாவாய்.

மார்கழி மாதத்தில் சந்திரன் பூரண ஒளிவீசும் இந்நாள் நன்னாளாக வாய்த்துள்ளது. வருகிறவர்கள் எல்லோரும் வந்து, நீராடி, கண்ணன் புகழ்பாடி வருவோம் என்று எவ்வளவு அழகாக, உரிமையுடன் திகழ்கிறது பாருங்கள் இப்பாசுரம். இதன் உட்பொருள் கைங்கரியச் சுவையுள்ள பாகவதர்களையும் பக்தர்களையும், பகவானுடைய கைங்கரியத்திற்கு அழைப்பதேயாகும்.

கண்ணன் புகழ்பாடுவது மட்டுமல்ல. விடியற்காலை நீராடி, தானத்

தையும் பிச்சையையும் இயன்றவரை நாம் கொடுத்தோம் என்ற செருக்கில்லாமல் கொடுத்து நெய்யும் பாலும் உண்ணுமல், கண்களுக்கு மையிட்டு அழகு செய்து கொள்ளாமல், கூந்தலைப் பூச்சூட்டி முடிக்காமல் உய்யும் வகையெண்ணி மகிழ்வோம் என்கிறது கீழேகாணும் இரண்டாவது பாசுரம்.

'' வையத்து வாழ்வீர்காள்! நாமும்
நம்பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ ?
பாற்கடலுள்
பையத்துயின்ற பரமன் அடிபாடி,
நெய்யுண்ணேம்; பாலுண்ணேம்;
நாட்காலே நீராடி,
மையிட்டெழுதோம்; மலரிட்டு நாம்
முடியோம்;
செய்யாதன செய்யோம்; தீக்குறளைச்
சென்றோதோம்:
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும்
கை காட்டி
உய்யுமாறெண்ணி உகந்தேலோ
ரெம்பாவாய்.''

நெய்யும் பாலுமில்லாது சிறிது மிளகு கலந்த அன்னத்தைப் பொங்கி நிவேதனம் செய்து, மிதமாக உண்டு வாழவேண்டும் என்றும், திருவாதிரை தினத்தன்று அவ்வித அன்னத்தையும் உண்ணுமல் வெறும் களியைக் கிண்டிப்பலகாரம் செய்ய வேண்டும் என்பது ஸ்ரீ காமகோடிப் பெரியவர்களின் கூற்று. இவ்விரதம் பூர்த்தி அடைந்ததும்,

'' வான்பெயல் நனைத்த புறத்த
நோன்பியர்
தையூண் இருக்கையின்''

என நற்றிணை என்னும் சங்க நூலில் கூறியபடி, மகர மாதம், (சூர்யாயனம்படி) தைமாதம் முதலிரண்டு தினங்களுக்கு விசேஷ ஆடை, ஆபரணங்கள் அணிந்து நெய்யும், பாலும் அதிகமாகச்சேர்த்தஉணவினை உண்டு களித்தனர். இக்கருத்தையே,

'' கூடாரை வெல்லும் சீர்க்கோவிந்தா !
உன்றன்னைப்
பாடிப் பறைகொண்டுயாம் பெறு
சம்மானம்
நாடுபுகழும் பரிசினல் நன்றாக
சூடகமே தோள்வளையே தோடே
செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும்
யாம் அணிவோம்;
ஆடை உடுப்போம்; அதன்பின்னே
பாற்சோறு
மூடநெய்பெய்து, முழங்கை வழி
வாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோ
ரெம்பாவாய்''

என்று திருப்பாவை 27 வது பாசுரத்தில் ஆண்டாள் வெளியிட்டு இருக்கிருள் போலும்,

ஸ்ரீ நடராஜர் கோயில் தெப்பக்குளம் - சிதம்பரம். திரு. கே. ஜெகதீஷ் - சென்னை.



மாணிக்கவாசகரும் இதே மார்கழி நீராடலைத் தமது திருவெம்பாவையில்,

'' போற்றி யாம் உய்ய ஆட்கொண்
டருளும் பொன்மலர்கள்
போற்றியாம் நீராடேலோ ரெம்பா
வாய்

என்று சிறப்பித்துப் பாடியுள்ளார்.

அதிகாலையில் நீராடுவதற்காக முதலில் கண்விழித்த பெண்கள் மற்ற பெண்களைத் துயிலினின்று எழுப்புவதே ஆண்டாள் திருப்பாவையிலும் மாணிக்கவாசகர் திருவெம்பாவையிலும் காணப்படும் ஒற்றுமையான அம்சம். திருப்பாவை திருவெம்பாவை இவ்விருநூல்களில் உள்ள பாடல்கள் ''ஏல் ஓர் எம் பாவாய்'' என்றே முடிகின்றன.

மார்கழி நீராடல் ஆண்டாள், மாணிக்கவாசகர் ஆகியோர் காலத்திற்கு முன்னமேயே பரம்பரையாக அனுஷ்டிக்கப்பட்டுப் பாவையர் நோன்பு நோற்று வந்திருப்பதை, ஆண்டாளே ''மார்கழி நீராடுவான் மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்'' என்று கூறி உறுதிப் படுத்துகிறுள்.

மாணிக்க வாசகர் திருவண்ணமலையில் தங்கியிருந்த காலை, கன்னிப் பெண்கள் மார்கழி மாதத்தில் திருவாதிரைக்குப் பத்து நாள் முந்தியே தொடங்கி வீடுதோறும் சென்று அங்குள்ள கன்னியரையும் அழைத்துக் கொண்டு விடியற்காலத்தில் பாடிக்கொண்டு குளத்தில் நீராடி வந்தார்கள் என்பதைக் கீழ்கண்ட அவரது பாடலால் அறிகிறோம்.

'' மாதர் கொண் மாதரெல்லாம்
மார்கழித்திங்கள் தன்னில்
ஆதிரை நாள்முன் ஈரைந்தாகிய
தினங்கள் தம்மில்
மேதகு மனைகள் தோறும் அழைத்
திருள் விடிவதான
போதிவர் தம்மிற் கூடிப் புனற்றட
மாடல் செய்வார்
அன்னவர் இயல்பு கண்டார் அங்கவர்
புகன்றதாக
மன்னிய திருவெம்பாவை வாசகம்
பேசி''—

இச்செய்யுட் குறிப்பிலிருந்து இவரது காலத்திற்கு முன்பே மார்கழி நீராடலும் பாவை நோன்பும் நம் நாட்டில் பழக்கத்திலிருந்து வந்ததாகத் தெரிகிறது.

(36-ம் பக்கம் பார்க்க)

*பஞ்சம் பறக்க என்று இன்பம் சுரக்க என்று*
*பழமை மடிக என்று பொங்குக பொங்கல்*
*புதுமை மணக்க என்று பொங்குக பொங்கல்*

தைத் திங்கள் முதல் தேதி பொங்கல் திருநாள். இந்திரன் செருக்கை அகற்றியது இத்திங்கள். குன்றமேந்தி குளிர்மழை காக்கச் செய்தது. கதிரவனை உலகுக்குத் தந்தது. அவனது ரதத்தை வடப்புறம் செலுத்தியது. பழையன கழிந்து புதியன தோன்றச் செய்கிறது. சபரிமலை ஆலயத்தை திறந்தது.

# பால் பொங்கிற்று?

பொங்கல் என்றாலே புது மணம் கமழ்கிறது. தமிழ்நாட்டில் தொழில் வழி வந்த விழா பொங்கல் என்று கூறலாம்.

ஏதாவது தொழில் ஆரம்பிக்கலாமா? என்று பெரியவர்களைக் கேட்டால் ''தைபிறக்கட்டும் ஆரம்பிக்கலாம்'' என்பார்கள். ''தை பிறந்தால் வழி பிறக்கும்'' என்கிற பழமொழியும் எல்லோரும் அறிந்ததே.

உழவுக்கும் தொழிலுக்கும் மதிப்புத்தரும் பண்பு தமிழகத்தில் பண்டைக் காலம் முதலே உண்டு. 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்கிற பாரதி வாக்கு தமிழகத்தின் பழைய பண்பாட்டை நினைவு படுத்துவதேயாகும்.

உயிர் வாழ்வதற்கு உணவு எவ்வளவு முக்கியம் என்பதைக் கூற வேண்டியதில்லை. உணவுஉற்பத்திக்கு மழை, சூரிய உஷ்ணம், மாடுகளின் சேவை இவை எல்லாம் இன்றியமையாதன. தைமாதம் பிறப்பதற்குள் அநேகமாக அறுவடை எல்லாம் முடிந்துவிடும். ஆண்டு முழுதும் தான் பாடுபட்டதற்கான பலனை உழவன் காண்கிறான். அந்தப் பூரிப்பில் இறைவனுக்கு நன்றி செலுத்துகிறான்.

உழவர்கள் தாம் உழைத்துப் பெற்ற புது அரிசியைப் பொங்கி இறைவனுக்குப் படைத்து வணங்குகின்றனர். ஆகவே இதை நன்றி செலுத்தும் திருநாள் என்றே கூறலாம். வீட்டிலுள்ள பழம் பானைகள் விடை பெறும். புதுப் பானைகளில் பொங்கலிடப்படும். பால் பொங்கும் போது 'பொங்கலோ பொங்கல்' என்கிற மங்கள ஒலி எழும்பும். அப்போது பெண்கள் குரவைஆடுவர்.

ஆதியில் மனிதர்களிலே ஒவ்வொருவரும் தத்தம் வாழ்க்கைக்காக மட்டுமே தொழில் புரிந்தனர். இந்த நிலை மாறி மக்கள் பலர் ஒரே இடத்தில் கூடித் தொழில் செய்யும் கூட்டுறவு முறை உழவர் தொழிலிலிருந்து தான் துவங்கியிருக்க வேண்டும். தொழில் துறையில் மனித குலத்தின் ஒருமைப்பாடு தோன்றிய புனிதநிலம் மருத நிலமேயாகும்.

தமிழகத்தில் ஆதி உழவன் தான் பாடுபட்டு உற்பத்திசெய்த உணவுப் பொருளை தனக்காக மட்டும் வைத்துக் கொள்ளவில்லை. அந்த தானியத்தை ஆறுபங்காகப் பிரித்து, ஒரு பங்கை அரசனுக்கு நாட்டின் நிர்வாகத்தை நடத்த வரியாகவும், ஒரு பங்கை இழந்துபோன தன் முன்னோர்களுக்கு (பித்ருக்கள்) ஒதுக்கியும், ஒரு பங்கை தெய்வத்திற்கும், ஒரு பங்கை விருந்தினருக்கும், ஒரு பங்கைத் தன் உறவினர்களுக்கும், ஆறாவது பங்கை தன் குடும்பத்திற்கும் உபயோகித்து வந்தான்.

**தென்புலத்தார், தெய்வம் விருந்து ஒக்கல் தான்**
**என்றாங்கு ஐம்புலத்தார் ஓம்பல் தலை**

என்கிற குறள் இதை விளக்குகிறது.

பொங்கல் திருநாள் சாதி, மத வர்ண வேற்றுமையின்றி மக்கள் அனைவராலும் கொண்டாடப்படும் தன்மை வாய்ந்ததாகும்.

அறுவடைக்குப்பின் விழாக் கொண்டாடுவது உலகத்தின் பல பாகங்களிலும் உண்டு. அமெரிக்கர்கள் ஆண்டிற்கொருமுறை 'நன்றி செலுத்தும் திருநாள்' என்று கொண்டாடுகிறார்கள். ஆனால் அங்கெல்லாம் இயந்திரங்கள் முக்கியத்துவம் பெற்று விட்டதால் இந்த விழாவின் அடிப்படைத் தத்துவம் புலனாவதில்லை.

தமிழர்கள், ஆடல், பாடல், சங்கீதம், ஆறு, கோயில் குளங்கள் இவைகளில் பெரும் பற்று உடையவர்கள் என்பதற்கு இத்திருவிழா ஓர் அறிகுறியாகும்.

பொங்கலிட்ட அடுப்புக்கும் நைவேத்யம் செய்யும் வழக்கம் சில இடங்களில் உண்டு. பொங்கலை சிறிது அடுப்புக்கு அர்ப்பணித்து தான் பின் பொங்கலை உண்ணும் வழக்கம் உண்டு.

---

**நஜன்-சென்னை.**

---

## முனையதரன் பொங்கல்

திருக்கண்ணபுரம் நீலமேகப் பெருமாள் சந்நிதியில் அர்த்த ஜாமத்தில் 'முனையதரன் பொங்கல்' நைவேத்யம் செய்யப் படுகிறது.

முனையதரன் என்ற பரம பக்தர் தினமும் தன் வீட்டில் பொங்கல் செய்து இந்த இறைவனுக்கு நிவேதித்து வந்தார். இதில் என்ன விசேஷம் என்றால் ஐந்துபங்கு அரிசி, மூன்று பங்கு பருப்பு, இரண்டு பங்கு நெய் சேர்த்து செய்யப்படுகிறது. பகவானுக்கு இது மிகப் பிரியமாம்.

## ஆன்மீகப் பொங்கல்

குடும்பப் பொங்கல் விழாவில் ஒவ்வொருவரின் ஆன்மீகப் பொங்கலும் உள்ளடங்கியிருக்கிறது. நமது உடம்பு ஒரு சிறிய குடிசை. அதனுள்

நாம் (ஆன்மா) வாழ்கிறோம். நம்மோடு ஐவர் (பொறி புலன்) இலவசமாக வாழ்வதோடல்லாமல் நம்மை அடக்கி ஆளவும் பார்க்கிறார்கள்! இவர்களை நாம் வென்று மதுரச் சோறு தினம் பொங்கிப் பகிர்ந்து உண்டு வாழ வேண்டும். இதுவே அன்றாடம் நிகழும் ஆன்மீகப் பொங்கல்.

அகம் (மனம்) அடுப்பு. அடுப்புக்கு மூன்று கற்கள் வேண்டும்: அன்பு, பொறுமை, அவா அறுத்தல் என்று மூன்று கற்கள். ஞானக்கனல், எரியும் விறகு, உயிர்க்கலசம் அருள் கருப்பஞ்சாறு. சிவானந்தமே பொங்கியெழும் மதுரச்சோறு. இக் கருத்தமைந்த பாடல் சிதம்பர சுவாமிகள் அருள் வாக்காக, திருவாசகத்திற்கு அடுத்தபடியாக மனமுருக்கும், திருப்போரூர் சந்நிதி முறையில் அமைந்திருக்கிறது. இம் முறையில் பொங்கல் விழாவை நாம் மனங் கொள்வோமாக.

அடியார் நிமலத் திருவகத்துள்
அன்பு பொறுமை அவாஅறுத்தல்
அடுப்பு ஆங்கு அமைத்து, மலக்
காட்டத்ததிக ஞானக்கனல் மூட்டி,
மடியாதிருந்த உயிர்க்கலசம் வழிய,
அருள் பேருலை வார்த்து,
மாறுப்பெருமைச் சிவானந்த
மதுரச்சோறு தினம் பொங்கி,
விடியாச் சிவபோத இருள்விய,
மவுனச் சுடர் விளக்கு
விளக்கி, இருந்தபடி இருந்து,
மேலாம் சிற்றில் விளையாடும்
செடிதிரகத்தோர் புகழ் வாலை சிறுவா,
சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா, சிறியேஞ்
சிற்றில் சிதையேலே.

இனிப்பும் வளர்ப்பும் கரும்பிலும் சம்பாவிலும் அமைந்திருக்கின்றன. ஆரோக்கியமும் சௌபாக்கியமும் இஞ்சிக் கொத்திலும் மஞ்சள் கொத்திலும் அமைந்திருக்கின்றன. இந்தப் பொங்கும் மாதத்தில் மானிடரை மயங்க வைக்கும் புகையிலையும் கஞ்ஜாவும் விளைவதில்லை. அவரை, உளுந்து, பயறு, மொச்சை முதலிய புன்செய் தானியங்கள் எல்லாம் பொங்கல் மாதத்தில் வந்து நிறைகின்றன.

நாம் மாத்திரம் பொங்குவது போதாது. நம் கால் நடைகளும் பொங்க வேண்டும். நாம் நித்தியம் பொங்கும் அரிசியில் கஞ்சியும் கழுநீரும் கால் நடைகளுக்கே போய்ச் சேரவேண்டும். அவைகளால் உழவனின் விளைவு பொங்கும்.

இந்த விழா நான்கு நாட்கள் நடைபெறுகின்றன. முதல் நாள் போகிப் பண்டிகை அல்லது இந்திரன் பொங்கல் என்றும் மறுநாள் பெரும் பொங்கல் அல்லது சூரியன் விழா வென்றும் மூன்றாவதுநாள் மாட்டுப் பொங்கல்அல்லது பட்டிப் பொங்கல் என்றும் நான்காம் நாள் கன்னிப் பொங்கல் அல்லது பூப்பொங்கல் என்றும் கூறப்படும். இந்தப் பொங்கலை சூரியன் தென்திசைப் போக்கை நிறுத்தி வடதிசை திரும்பும் தினத்தில் கொண்டாடுகிறார்கள். இதுவே உத்தராயண புண்ணிய தினமாகக் கருதப்படுகிறது.

ரதசப்தமி என்பது தை மாதத்தில் சுக்ல சப்தமியாகும். தை மாதத்தில் சூரியன் மகரத்தில் இருக்கிறார். சப்தமி என்பது 7-வது நாள். ஒரு ராசிக்கு 2¼ நாள்ஆக சப்தமி என்பது மூன்று தாண்டி அதாவது மேஷத்தில் தான் வருவது வழக்கம்.

## சூரிய வழிபாடு

நம்நாட்டில் சூரியனை வழிபடுவதென்பது இன்று நேற்று ஏற்பட்டதல்ல. ரிக்வேத காலத்திற்கும் முற்பட்டு இந்த வழிபாடு இருந்து வருகிறது. எப்போது எப்படி ஆரம்பமானது என்பது யாருக்கும் தெரியாது.

கி. மு. 2000 வருஷத்தில் ஆரியர்கள் சூரியன், அக்னி, வருணன் இவர்களை வழிபட்டனர். பாரசிகத்தில் தங்கிவிட்ட ஆரியர்கள் சூரியனை வழிபட்டனர் என்றாலும் அக்னிக்குத்தான் அவர்கள் முக்கியத்துவம் கொடுத்தனர். சூரியனை திருமாலின் அம்சமாக நம் முன்னோர்கள் கருதி வந்தனர். மந்திரங்களில் மகா சக்தி வாய்ந்ததாகக் கருதப்படும்'காயத்ரி' சூரியனுக்கு உகந்த மந்திரம்.

சூரியனுக்கே உரித்தான சௌர மதம் ஷண்மதங்களில் ஒன்று. ஷண்மத ஸ்தாபனத்திற்கு முன்பு சௌர மதத்தினர் ரத்த அர்க்கியம் கொடுத்து வழிபட்டனர். ஆதிசங்கரர் தான் இதை மாற்றினார். இந்த ஷண்மத ஸ்தாபனம் மூலம் ஆதிசங்கரர் உலக மக்கள் அனைவருக்கும் வழிகாட்டி விட்டார். எப்படி எனில் ஹிந்துக்கள் அல்லாதவர்களும் சூரியனைக் கடவுளாக வழிபடுகின்றனர்.

அசையும் பொருள்கள் எல்லாவற்றிற்கும் சூரியன்உயிர் என்று வேதங்கள் கூறுகின்றன. காயத்திரியை வழிபடாமல் மற்ற தெய்வங்களை ஆராதிப்பதில் பயனில்லை. சௌர மதம் சர்வதேச மதமேயாகும். பல நோய்களை சூரியன் குணப்படுத்துவதாக அதர்வண வேதம் கூறுகிறது. சூரியன் கண்ணால் காணக்கூடிய தெய்வமாக விளங்குகிறது என்பதை உபநிஷத்துகள் வருணிக்கின்றன.

சூரியனைப்பற்றி வேதங்களில் காணப்படும் உண்மைகள் விஞ்ஞான உண்மைகளுக்கு முரணாக இல்லை என்பது பெரியோர் கருத்து· சூரிய கிரணம் ஏழு கிரணங்கள் சேர்ந்துள்ளது என்கிறது விஞ்ஞானம். இதைத்தான் சூரிய ரதத்தை ஏழு குதிரைகள் இழுப்பதாக வேதம் கூறுகிறது· அச்வம் என்ற சப்தத்திற்கு கிரணம் என்றும் பொருள் கூறலாம். ஒளி, பிரயாணம் செய்கிறது என்கிற கருத்தை வேதம்தான் முதலில் கூறியது என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

சூரியனைப் பரம்பொருளாக "ஆதித்ய ஹிருதயம்" கூறுகிறது: மார்க்கண்டேய புராணம், பவிஷ்ய புராணம் முதலியவை சூரிய

(31-ம் பக்கம் பார்க்க)

# பறை கேட்ட பாவை



மாதங்களில் சிறந்தது மார்கழி மாதம். இது சத்வகுணம் தோன்று கின்ற மாதம். மாதங்களில் நான் மார்கழியாக நிற்கிறேன் என்கிறான் கீதையில் கண்ணன். இப்படிப்பட்ட விசேஷமான பருவத்திலே நாம் இறைவனின் வெகு அருகாமையிலி ருக்கிறோம் என்பதுஇதன் தத்துவம். ஆகவேதான் சூடிக்கொடுத்த நாச்சி யாரான ஸ்ரீ ஆண்டாள் இம்மாதம் முப்பதுநாட்களையும் தேர்ந்தெடுத்து முப்பது பாடல்களைப் பாடினார்.

இறைவனிடம் பக்தி செலுத்துவ தில் ஆண்டாள் கைப்பற்றிய வழி— தான் உயர் குலத்தில் உதித்த பெண் ணாயினும் கோபிகையரின் பக்தி மார்க்கம் அவளுக்குப் பிடித்திருந் தது. தன்னையே கோபிகையாக்கிக் கொண்டாள். ஆயர்பாடிச் சிறுமி யாக உலாவினாள். பாவை நோன்பு நோற்றாள். எல்லாரையும் இந்த மாதத்தில் வைகறையில் துயில் எழுப்புகிறாள். எதற்காக?

மார்கழி மாதம் மதிநிறைந்த நன்னாள்

மார்கழி மாதம் முப்பது நாட்க ளுமே விசேஷம்தான். அதிலும் சுக்லபட்சத்து பௌர்ணமி நாள். நம் ஞானமும் அதுபோல் வளர்ந்து நிறைவு பெற வேண்டும். இத்தகைய நல்ல நாளிலே விடியற்காலையிலே 'எல்லாரும் வாருங்கள் நீராட' என அழைக்கிறாள். வெறுமே உடல் தூய் மைக்காக குளிக்கும் நீராடல் மட்டு மல்ல; கிருஷ்ணபக்தி என்ற நீரோ டையில் வேணுகானம் என்ற ஆற் றொழுக்கில் அமிழ்ந்திடத்தான் அழைக்கிறாள். இதன் தத்துவார்த் தம், நீராடலின் உள்ளர்த்தம் இது தான்.

"புறந்தூய்மை நீரான் அமையும்
அகந்தூய்மை
வாய்மையால் காணப்படும்"
(குறள் — 298)

என்கிறார் திருவள்ளுவர்.

உடல் தூய்மை நீரால் பெற்று விடலாம். மனத்தூய்மை எப்படிப் பெறுவது? மெய்யுணர்வால் தான் பெறமுடியும். சத்யமான பொருளை நித்யமான பொருளை உணர்ந்தால் மனத்தூய்மை பொலியும். அதற்கு மேற்சொன்ன பக்தி என்ற ஓடையில் முழுக வேண்டும்.

போதுமினோ நேரிழையீர்!

போகலாம், வாருங்கள். எந்தவிதத் தடையுமில்லை; தயக்கமும் வேண் டாம். நல்ல ஆபரணங்களை அணிந்த ஆயர்பாடிச் சிறுமிகளாம் அவர்கள். என்ன ஆபரணங்கள்? அச்சம், நாணம் மடமை, பயிர்ப்பு ஆகிய குணநலன் கள் அவர்களுடைய அணிகலன்கள் என்று சொல்லவேண்டும். மற்ற பொன்னாலான ஆபரணங்களைப்பற்றி ஆண்டாள் இங்கு பேசவில்லை. இத் தகைய சிறுமிகளை செல்லமாக அழைக்கிறாள், சிறுமீர்காள் என்று.

'யசோதை இளஞ்சிங்கம்' கண்ணன் எப்படிப் பட்டவன்? அவனுடைய பெற்றோர் யார்? இது அடுத்த வரி யில் வருகிறது. கண்ணனுக்குப் பகை வனான கம்சன் எப்போது இவனைத் தீர்த்துக் கட்டலாம் என்று பழி யாய்க் காத்திருக்கிறான். பல அசுரர் களை ஏவுகிறான். அவர்கள் எப்போது எந்த உருவத்தில் வந்து கண்ணனுக் குத் தொந்தரவு கொடுப்பார்களோ தெரியாது. ஆகவே கண்ணனுக்குப் பாதுகாவலாக அவனுடைய தந்தை நந்தகோபன் தயாராக இருக்கிறார்,

அம்பிகை பாகன்
வேலூர்.

தீட்டப்பட்ட கூரிய வேலும் கையு மாக. அவர்தான் கண்ணனுக்கு மெய் காப்பாளர்; உயிர்க் காவலர். அவ ருடைய திருக்குமாரன் கண்ணன். தாய் எப்படிப்பட்டவள்? அழகு பொருந்திய கண்களை உடையவள். பெண்களுக்கு அழகு கண்களில் என் பார்கள். அது எவ்வளவு உண்மை? அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பார்கள். முகத்தில் அழகு தெரி யும் என்பதைவிட இன்னும் ஒரு படி மேலே போய் அழகு கண்ணில் தெரி யும் என்று கூறுவதுதான் மிகவும் பொருத்தம். அப்படிப்பட்ட அழகிய கண்கள் யசோதைக்கு. அதில் தான் எத்தனை கவர்ச்சி! எத்தனை அருள் நோக்கு! இப்படி அருட்பார்வையும் அழகிய கண்களையும் உடைய யசோதை பெற்றெடுத்த சிங்கக் குட்டி இந்தக் கண்ணன். அழகிக்குப் பிறந்த அழகன் அவன். அவன் அழகு மேனி எப்படி?

கார்மேனிச் செங்கண்-
கதிர்மதியம் போல் முகத்தான்.

கண்ணனின் அழகைச் சொல்லி முடியுமா என்ன? கார்மேகம்மழை பொழியும். கார்மேகத்தைப் போன்ற நீலமேகச் சியாமள வர்ணனான கண்ண னும் அருள் மழை பொழிவான். அவன் கண்கள் சிவந்து தெரிகின்றன. எதனால்? செந்தாமரைப் பூவை ஒத்

திருப்பதால். அது மட்டுமல்ல. அவனுடைய முகம் செங்கதிரோனையும் ஒத்திருக்கிறது; குளிர்ந்த தண்ணிலவையும் ஒத்திருக்கிறதாம். பகைவர்களைச் சுட்டெரிக்க தனலாய்க் தகிக்கின்ற முகம் ஒரு புறம்: பக்தர்களை அருள் பாலிக்க அருளைச் சொரிகின்ற குளிர்ந்த நிலவு போன்றமுகம் மறுபுறம். இப்படி அழித்தல், அருளல் என்ற இரு தொழிலையும் செய்கின்ற கண்ணன் வேறுயாருமில்லை. நாராயணனே.

நாராயணனே நமக்கே பறை தருவான் பறை என்றால் நல்ல பலன். நற்கதி-நல்ல வீட்டுப் பேறு - இதை அளிக்க வல்லவன் நாராயணனே யன்றி வேறு யாருமில்லை என்று அறுதியிட்டுச் சொல்கிறாள், ஆண்டாள்.நாராயணனே என்பதில்உள்ள அழுத்தத்தைக் கவனிக்கவேண்டும். அந்த ஏற்றம் அவனுக்கே. நமக்கே என்பதில் மற்றொரு ஏற்றம். நமக்கே என்று எல்லோரையும் சேர்த்துச் சொல்கிறாள். தனக்கு மட்டும் மோட்சம் கிடைத்தால் போதும் என்ற சுயநலம் இல்லை. 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற பொது நலம் இங்கே விளங்குகிறது. இந்த சுகானுபவம் எல்லாருக்கும் கிடைக்க வேண்டும் என்பது ஆண்டாளின் உள்ளக்கிடக்கை. தன்னுடன் சேர்ந்த பக்தைகள் அனைவரும் இந்த இன்பத்தைத் துய்க்கவேண்டும் என்ற பரந்த நோக்கை – விரிந்த உள்ளத்தை – ஆண்டாளிடம் பார்க்கிறோம். எல்லோரும்இன்புற்றிருக்கநினைப்பதுவே யன்றி வேறொன்றறியேன் என்ற தாயுமானவரின் உயர்ந்த தத்துவமும், 'சேரவாரும் ஜெகத்தீரே' என்று அறை கூவிய வள்ளலாரின் சமரச சன்மார்க்கநெறியும், 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்பதில் ஒலிக்கிறதல்லவா? இந்த நற்கதியை அடைய நாராயணனின் நாமத்தைப் பாடிக்கொண்டேயிருக்க வேண்டும். அப்போது தான் பிறவிக் கடலை நீந்தி மறுகரையில் உள்ள நற்கதியை அடையமுடியும்.

பிறவிக் கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடி சேராதார்.

(குறள்: 10)

பிறவிக் கடலை நீந்த வேண்டுமெனில் இறைவனடியைச் சார்ந்து நிற்க வேண்டும்; இறைவனடி என்ற தெப்பம் துணைக்கொண்டு பிறவிக்கடலை நீந்தவேண்டும். நீந்தி மறுகரையான நற்கதியை அடையவேண்டும். இறைவனடியைச் சார்ந்து நிற்றல் அவனைச் சர்வ சதா சிந்தித்தலே ஆகும். அவன் திரு நாமம் ஜெபிப்பதற்கே ஆகும்.

இவ்வாறு கண்ணனின் நாமம் பாடுங்கால், பாரெல்லாம் புகழ நல்ல மழை பொழிந்து வளம்கொழிக்கட்டும் என்று வாழ்த்தியபடி ஆண்டாள் தன் முதல் பாசுரத்தை முடிக்கிறாள். இப்பாடலை ஒரு முறை முழுமையாகப் படிப்போம்!

மார்கழித் திங்கள் மதிநிறைந்த
நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ
நேரிழையீர்:
சீர்மல்கும் ஆய்பாடிச் செல்வச்
சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன்
நந்தகோபன் குமரன்
ஏரார்ந்தகண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம்
போல் முகத்தான்
நாராயணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழ்ப் படிந்தேலோர்
எம்பாவாய்.

★

# வர வேண்டும் ஒரு நாளே!

திரு. இரா. இளங்கோதாசன் - சித்தூர்

ஸ்ரீதேவி நெஞ்சத்தில் சிங்கார மஞ்சத்தில்
சீராக வீற்றிருக்கும் கோவிந்தா!—உந்தன்
மாதேவி அருளாலே எளியோர்கள் நலமாக
மழை போலும் தரவேண்டும் வைகுந்தா! ஸ்ரீதேவி

அழகான மலைமீது ஆனந்த அலை மோத
அன்பாகக் காத்திருக்கும் திருமாலே!—உந்தன்
பழமான உள்ளத்தின் பதமான அருளாலே
பாரெங்கும் நடத்திடு திருநாளே! ஸ்ரீதேவி

வேதாந்த சிகரத்தில் ஒய்யாரவடிவத்தில்
உலகத்தைப் பார்த்திருக்கும் பெருமானே!—உந்தன்
நாதாந்த பதத்தாலே நல்லோர்கள் செழித்தாட
நீ யாக வரவேண்டும் ஒருநாளே! ஸ்ரீதேவி

ஆழ்வார்கள் இல்லத்தில் பாசுரத்துப்பல்லக்கில்
அழகாக அமர்ந்திருக்கும் சாரங்கா—அந்த
ஆழ்வார்கள் துணையோடு அடியேனும் முனைந்திட
அருளாசி தரவேண்டும் சீரங்கா! ஸ்ரீதேவி

சங்கார சக்கரத்தில் சழக்கர்கள் சிதைந்தோட
சான்றோரைக் காத்துவரும் நெடியோனே!—அந்த
மங்காத புகழுக்கு பாமாலைநான் சூட
மாத்தமிழைத்தர வேண்டும் வடிவோனே! ஸ்ரீதேவி!






# பாடல் பாடிய பாலகன்

திருமதி. புனிதவதி பார்த்திபன்,
வாலாஜாபாத்.

தமிழ்நாடு முற்காலத்தில் சேர நாடு, சோழநாடு, பாண்டிய நாடு என மூன்று பிரிவுகளாக இருந்தது. இப்பிரிவுகளுள் ஒன்றாகிய சோழ நாட்டில் சீர்காழி என்ற திருத்தலம் ஒன்று உண்டு. அங்கே, சிவபாத இருதயர் என்றொரு பக்தர் வாழ்ந்து வந்தார். அவர் மனைவியார் பெயர் பகவதியம்மையார் என்பது. இருவரும் சிறந்த பக்தர்கள். தங்களுக்கு ஞானம் மிகுந்த ஆண்குழந்தை ஒன்று பிறக்க வேண்டும் என்று இவர்கள் இறைவனை வேண்டிவந்தனர்.

இவர்கள் வேண்டிக் கொண்டபடியே இவர்கட்கு ஆண்மகவு ஒன்று நல்ல நாளில் பிறந்தது. அந்தக் குழந்தைக்குச் சம்பந்தர் என்று பெயர் சூட்டினார்கள். குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது. குழந்தையின் வளர்ச்சியைக் கண்டு பெற்றோர்கள் மகிழ்ச்சியடைந்தனர். குழந்தைக்கு வயது இரண்டு முடிந்தது. மூன்றும் வயது தொடங்கியது.

சீர்காழியில் சிறப்பு மிக்க சிவன் கோயில் ஒன்று உண்டு. அங்கே எழுந்தருளியுள்ள சிவபிரான் பெயர் திருத்தோணியப்பர் என்பது. அக்கோயிலுள் திருக்குளம் ஒன்று உண்டு. அதற்குப் பிரம்ம தீர்த்தம் என்பது பெயர். சிவபாத இருதயர் நாள்தோறும் அக்குளத்துக்கு வந்து நீராடுவார். வழக்கம் போல, ஒரு நாள் சிவபாத இருதயர் அக்குளத்துக்குக் குளிக்கப் புறப்பட்டார். குழந்தை சம்பந்தரும் கூடவே வந்தார். குளத்துக்குத் தன்னுடன் வரும் குழந்தையைத் தந்தையார் தடுத்துப் பார்த்தார். குழந்தை அழுது அடம்பிடித்தது. எனவே, குழந்தையை அழைத்துக் கொண்டு சிவபாத இருதயர் குளத்துக்குச் சென்றார்.

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# தங்குவசதி ஒதுக்கீடு நிபந்தனைகள்

1. தேவையான தொகையினை ஒரு வாரத்திற்கு முன்கூட்டியே செலுத்தினால், திருமலையில் அல்லது திருப்பதியில் தங்கு வசதிக்கான ஒதுக்கீடு அளிக்கப்படும்.
2. தேவையான தங்குவசதியின் சரியான விவரத்தையும், சரியான முகவரியையும் தங்கள் மனுவில் குறிப்பிட்டு அதனுடன் தொகைக்கான டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியார்டர் ரசீதினை இணைத்தல் வேண்டும். குறிப்பிட்ட தங்குவசதி அளிக்க முடியாதிருப்பின், வேறு தங்கு வசதி அளிக்கப்படும்.
3. வேறு தங்கு வசதிக்கான தொகை ஏற்றுக்கொண்டபின், மீதம் தொகை இருக்குமானால் அது திருப்பித்தரப்படும்.
4. குறிப்பிட்ட தேதிக்கு தங்கு வசதிக்கு ஒதுக்கீடு அளிக்க முடியாவிடின், அனுப்பிய தொகை திருப்பித் தரப்படும்.
5. தொகை பெற்றுக்கொண்ட உடனேயே, ஒதுக்கீடு அட்டை அனுப்பப்படும். தங்கு வசதிக்காக திருமலைக்கு வருபவர்கள், இவ் ஒதுக்கீடு அட்டையினை குறிப்பிட்ட விசாரணை அலுவலகத்தில் காட்டல் வேண்டும். இவ் அட்டையினையோ அல்லது மணியாடர் ரசீதினையே அல்லது தொகையினைப் பெற்றுக்கொண்டதற்கான ரசீதினையோ காண்பிக்காவிட்டால். அவர்களுக்கு தங்குவசதி அளிக்கமுடியாது.
6. ஒரு நாள் என்பது காலை 8 மணி முதல் அடுத்த நாள் காலை 8 மணி வரை என்பதாகும்.
7. தங்கு வசதி ஒதுக்கீடு செய்து கொண்டவர்கள். தாங்கள் ஒதுக்கீடு செய்துகொண்டநாட்களில் முதல்நாள் வராது அதனைத்தொடர்ந்து வரும் நாட்களின் போது வந்தால் அவர்களுக்கு அளிக்கப்பட்ட தங்கு வசதியினை பயன் படுத்தாத நாட்களுக்குரிய வாடகைத் தொகை போக, அவர்கள் கணக்கில் இருக்கும் மீதித்தொகைக்கு ஏற்ப தங்கு வசதி அவர்களுக்கு அளிக்கப்படும்.
8. எனினும், தங்களுடைய ஒதுக்கீடு தேதியினை தள்ளிப் போடவோ அல்லது செலுத்திய தொகையினைத் திருப்பிப் பெறவோ நினைப்பவர்கள், தங்கள் எண்ணத்தை இட ஒதுக்கீடு செய்து கொண்ட குறிப்பிட்ட தேதிக்கு இரண்டு நாட்களுக்கு முன்பேயே எழுத்து மூலம் விண்ணப்பித்தால், அவர்கள் செலுத்திய தொகை திருப்பித் தரப்படும்.
9. தங்குவசதி ஒதுக்கீடு வசதி இரண்டு நாட்களுக்கு மட்டுமே அமைத்துத் தரப்படும். மேற்கொண்டு அவ்வசதியினை நீட்டிப்பது என்பது, கிடைக்கும் இடவசதியை பொறுத்ததாகும்.
10. டிமாண்ட் டிராஃபட் அல்லது தொகை பெற்றுக் கொண்டதற்கான ரசீது அல்லது மணியாடர் ரசீதுடன் கூடிய விண்ணப்பங்கள் யாவும் Reception Officer, T. T. Devasthanams, Tirumala அல்லது Tirupati எனும் முகவரிக்கே அனுப்பப்படல் வேண்டும். டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியாடர் குறிப்பிட்ட Reception Officer எனும் பெயரில் தான் எடுத்தல் அல்லது அனுப்பப்படல் வேண்டும். செக்குகள் (Cheques) ஏற்றுக்கொள்ளப்படமாட்டா.
11. இடவசதி ஒதுக்கீடு உரிமைகள் யாவும் தி. தி. தேவஸ்தானத்திற்கே உரியது.
12. அஞ்சல் அலுவலகத் தாமதங்களுக்கு தி. தி. தே. பொறுப்பேற்காது.

குழந்தையைக் குளக்கரையில் உட்காரவைத்து விட்டுச் சிவபாத இருதயர் குளத்தினுள் இறங்கிக் குளிக்கத் தொடங்கினுர். மனத்தில் அழுக்கு எதுவும் இல்லாத சிவபாத இருதயர் உடம்பில் உள்ள அழுக்கைப் போக்கிக்கொள்ளக் குளத்து நீரில் மூழ்கினுர்.

நீருள் மூழ்கிய தந்தையைக் காணுமல் குழந்தை அழுதது. "தந்தைக்கு என்ன நேர்ந்ததோ?" என்று குழந்தையின் சிந்தை நொந்தது. எனவே சம்பந்தரின் கண்கள் நீரைச் சொரிந்தன. பூப் போன்ற கைகளால் கண்களைப் பிசைந்து கொண்டும் அழுது கொண்டும் இருந்தார். சம்பந்தர் அழும் போது அவரின் உதடுகள் துடித்தன. செய்வதறியாது நாற்புறமும் நோக்கிச் சம்பந்தர் அழுதார். கடைசியாகக் குளக்கரையில் இருந்த கோபுர உச்சியினை நிமிர்ந்து பார்த்தார். அங்கே, சிவபிரான் உமாதேவியாரோடு வீற்றிருக்கும் காட்சியைக் கண்டார். உடனே அவருக்குத் தாயின் நினைவும் தந்தையின் நினைவும் வந்தது. எனவே, சிவபிரானையும் பார்வதியையும் பார்த்து "அம்மா! அப்பா!" எனச் சம்பந்தர் மேலும் அழத்தொடங்கி விட்டார்.

சம்பந்தரின் அழுகையொலி சிவபிரானின் திருச்செவிகளில் வீழ்ந்தது. உடனே, சிவபெருமான் பார்வதி தேவியுடன் வெண்மை நிறமுள்ள எருதுவாகனத்தில் ஏறி அக்குளக்கரையை அடைந்தார். குழந்தையாகிய சம்பந்தரின் முன் சிவபெருமானும் பார்வதி தேவியும் வந்து தோன்றினர். அழுகின்ற குழந்தைக்கு ஞானப்பாலைத் தருமாறு சிவபிரான் பார்வதி தேவியிடம் கூறினுர். பார்வதி தேவியார் சம்பந்தரின் கண்களிலிருந்து வழியும் கண்ணீரைத் துடைத்தார். ஞானப்பாலைப் பொற்கிண்ணத்தில் பெய்தார். அதனை அன்புடன் சம்பந்தருக்கு ஊட்டினுர். பாலுண்ட சம்பந்தர் அழுகையை நிறுத்தினுர். குழந்தையின் வயிறும் உள்ளமும் குளிர்ந்தது.

ஞானப்பாலை அருந்தியதால் சம்பந்தர் சிவஞான சம்பந்தரானுர். பிள்ளையார் என்பதற்குக் குழந்தை என்பது பொருள். சிவபெருமானுல் ஆளப்பட்டதால் சம்பந்தருக்கு ஆளுடைய பிள்ளையார் என்ற பெயரும் வழங்கப்

பெற்றது. ஞான சம்பந்தருக்குப் பாலமுதம் தந்தபின் சிவபெருமானும் உமாதேவியாரும் மறைந்து விட்டனர்.

பின், சம்பந்தரின் தந்தையார் குளத்து நீரிலிருந்து எழுந்து வெளியே வந்தார். குழந்தை சம்பந்தரைக் கண்டார். சம்பந்தரின் கையில் பொற்கிண்ணம் ஒன்று இருந்தது. அவர் வாயைச் சுற்றிலும் பால் வழிந்து கொண்டிருந்தது. இதனைக் கண்ட சிவபாத இருதயருக்குக் கோபம் வந்தது.

"உனக்குப் பால் கொடுத்தவர் யார்? உனக்கேது இந்தப் பொற்கிண்ணம்? யாராவது புதியவர்கள் பால் கொடுத்தால் அதனைக் குடிக்கலாமா? எச்சில் பாலை ஏன் குடித்தாய்? உனக்குப் பால் கொடுத்தவர்களை எனக்குக் காட்டு!" என்று பாலகனைத் தந்தையார் அதட்டினார். கையில் ஒரு சிறு பிரம்பை எடுத்துக் கொண்டு அடிப்பது போல் ஓங்கிப் பாவனை செய்தார்.

உடனே, சம்பந்தப்பெருமான் உயரே நோக்கினார். குளக்கரையில் காட்சியளிக்கும் சிவபெருமானையும் பார்வதிதேவியாரையும் சுட்டிக்காட்டினார். வேதங்களாலும் சுட்டிக்காட்ட முடியாத சிவபெருமானைச் சம்பந்தர் சுட்டிக் காட்டியது கண்டு தந்தையார் திகைத்து நின்றார். "சம்பந்தர் சுட்டிக் காட்டியது வியப்பேயன்றோ! பாலைக் கொடுத்தவர் இவர்தான் எனச் சிவபெருமானைச் "சம்பந்தர் கூறுவது உண்மையாக இருக்குமா?" எனச் சிவபாத இருதயர் சிந்தனையில் ஆழ்ந்தார். ஆனால், அவருடைய சந்தேகம் நீங்குமாறு அப்போது அதிசயம் ஒன்று நிகழ்ந்தது!

மூன்று வயதே நிரம்பிய சம்பந்தர் ஞானப்பால் உண்டதால் சிவஞானம் வரப்பெற்றார். எனவே, நன்றாகப் பேசவே வராத குழந்தைப் பருவமுடைய சம்பந்தர் தானாகப்பாடும் ஆற்றலைப் பெற்றார். ஞானப்பால் தந்த உமையொருபாகனைச் சுட்டிக் காட்டிப் பாடத் தொடங்கினார். அதிசயக் குழந்தையின் திருவாயிலிருந்து மலர்ந்த முதல் பாடல் இது தான்!

**தோடுடைய செவியன்விடை யேறி ஓர்**
**தூவெண் மதிசூடிக்**
**காடுடைய சுடலைப்பொடி பூசி என்**
**உள்ளம் கவர் கள்வன்**
**ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்**
**தேத்த அருள்செய்த**
**பீடுடைய பிரமாபுரம் மேவிய**
**பெம்மான் இவன் அன்றே!**

தமக்குப்பால் கொடுத்தவர் சிவபிரான்தான் என்பதைச் சம்பந்தர் பத்துப் பாடல்களைப் பாடி உறுதி செய்தார். பாடல்களைக் கேட்டுத் தந்தையாரின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகியது. சிவபெருமானின் அருளை எண்ணிச் சிவபாத இருதயர் சிந்தனையில் வந்தனை செய்தார். தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். வானுலகில் மங்கல வாத்தியங்கள் முழங்கின.

ஞானம் நிரம்பப் பெற்ற சம்பந்தர் குளக்கரையிலிருந்துப் புறப்பட்டுத் திருக்கோயிலுக்குள் புகுந்தார். கைகளைக் கூப்பிக் கொண்டே தந்தையாரும் மைந்தரின் பின்னாலேயே செல்லலானார். இந்த அதிசய நிகழ்ச்சியைக் கேட்டுப் பலரும் அங்கே வந்து கூடினார்கள். கோயிலுக்குள் சென்ற பாலகர் மற்றுமொரு பத்துப் பாடல்களை அங்கே பாடி நின்றார். பின்னர், கோயிலை விட்டுத் தம் வீட்டுக்குப் புறப்படலானார்.

சிவபாத இருதயர் மகிழ்ச்சிப் பெருக்கினால் தம் மைந்தரை அள்ளி எடுத்துத் தம் தோள் மேல் வைத்துக் கொண்டு நடந்தார். இவர்கள் செல்லும்தெருக்களில் வாழும்எல்லோரும் சம்பந்தரைக் கண்டு வணங்கி நின்றனர். அன்றிரவு சிவபிரானைச் சிந்தித்தவாறே சம்பந்தர்கண்துயின்றார். மறுநாள் காலை எழுந்தார். தம் சொந்த ஊராகிய சீர்காழியைவிட்டு பக்கத்திலிருக்கும் திருக்கோலக்கா என்னும் தலத்தை அடைந்தார். திருக் கோலக்காவில் உள்ள சிவபிரான் கோவிலுக்குள் சம்பந்தர் சென்றார். அங்கு எழுந்தருளியிருக்கும் ஆண்டவனைப் பாடி வணங்கினார். பாடும்போது தன் பிஞ்சுக் கைகளால் தாளம் போட்டார். இதனைக் கண்டு இறைவன் மனம் மகிழ்ந்தார். பாலகனின் பூப்போன்ற கைகள் தாளம் போடுவதால் சிவந்து போகுமே என்று எண்ணினார். எனவே, இறைவர், திருஞான சம்பந்தருக்குப் பொன்னாலாகிய தாளத்தைக் கொடுத்து அருள்புரிந்தார். பொன் தாளத்தை முழக்கிக் கொண்டே அமிழ்தினும் இனிய தமிழ்ப்பாடல்களைச் சம்பந்தர் பாடிக்கொண்டுச் சென்றார்.

திருக்கோலக்காவிலிருந்து புறப்பட்ட சம்பந்தர் தலங்கள் பலவற்றுக்கும் சென்றார். பாடல்களைப் பாடினார். ஆங்காங்கே அதிசயங்கள் பலவும் நிகழ்த்தியருளினார்.

இவ்வாறு இறைவனுக்குத் தொண்டு புரிந்துவந்த சம்பந்தருக்குப் பதினாறு வயது நிகழ்ந்தது. சிவபாத இருதயர் தன் மகனுக்குத் திருமணம் செய்ய முடிவு செய்தார். சம்பந்தர் இதற்குச் சம்மதிக்கவில்லை. பெரியோர்கள்பலரும் வற்புறுத்தவே இறுதியில் சம்பந்தர் திருமணத்துக்கு இசைந்தார். திருநல்லூர்ப் பெருமணம் என்னும் ஊரில் திருமணம் நிகழ்ந்தது.

மணமகளின் கைகளைப் பற்றிக் கொண்டு சம்பந்தர் திருநல்லூரில் உள்ள ஒரு கோயிலுக்குள் சென்றார். உறவினர்களும், அன்பர்களும் அவருடன் கூடவே கோயிலுக்குள் புகுந்தனர். அப்போது அங்கே ஒப்பற்ற ஒளி ஒன்று தோன்றியது. அந்த ஒளியில் சம்பந்தரும், மற்றவரும் கலந்து இறைவனின் திருவடிநிழலை அடைந்தனர்.

மூன்று வயது பாலகனால் பாடியிருக்க முடியுமா? என்று எல்லோருக்கும் சந்தேகம் தோன்றும். இறைவன் அருள் இருந்தால் எதுவும் முடியும். சுப்பிரமணிய பாரதியார் ஏழே வயதில் பாடவில்லையா?

இறைவன் அருள் பெற என்ன செய்ய வேண்டும்? இறைவன் திருமுன்னே நின்று அழவேண்டும். அழுதால் ஆண்டவன் அருளைப் பெறலாம். எனவே, பாடல்பாடிய பாலகனைப் போன்று நாமும் இறைவன் முன்பு நின்று அழுவோம்! தொழுவோம்! நமக்கு எல்லா நலன்களும் இதனால் கிடைக்கும்!



# பிரதி பலிப்பு

திரு. பா. முத்துக்குமரன்
காட்டுக்கோட்டை.

சிங்காபுரி எனும் தேசத்தை கங்கன் எனும் மன்னன் சீரும் சிறப்புமாக ஆண்டு வந்தான். அவன் ஓவியக் கலைக்கு சிறந்த மதிப்பளித்து வந்தான். ஒரு நாள் மன்னனது தர்பாருக்கு மதிவாணன் எனும் சிறந்த ஓவியன் ஒருவன் வந்தான். மன்னன் ஓவியனை அன்புடன் வரவேற்று உபசரித்தான்.

அரண்மனையிலுள்ள சுவர் ஒன்றில் ''ராமர் பட்டாபிஷேக'' காட்சி ஒன்றை வரையுமாறு மன்னர் மதிவாணனை வேண்டினார். அப்போது அவ்வூர் ஓவியன் ஒருவன் எழுந்து எதிர் சுவரில் அதேமாதிரி மற்றொரு ஓவியம் வரைய அனுமதி வேண்டினான்.

மன்னர் உள்ளூர் ஓவியரிடம், ''நீ மதிவாணர் வரையும் ஓவியத்தைப் போலவே வரைய முடியுமா? அவர் எவ்வளவு காலத்திற்குள் சித்திரத்தை முடிக்கிறாரோ நீயும் அதே காலத்திற்குள் முடிக்க முடியுமா?'' என்றார்.

உள்ளூர் ஓவியர் தன்னால் அது சாத்தியமே என பணிவுடன் கூறினான். இரண்டு சுவர்களுக்கிடையே கனமான திரையை தொங்கவிடும்படி மன்னர் கட்டளையிட்டான்.

சித்திரம் வரையும் பணி முடிவடைந்ததாக மதிவாணன் கூறிய அதே நேரத்தில் உள்ளூர் ஓவியனும் தனது பணியும் முடிவடைந்ததாக கூறினான். சுவற்றுக்கு இடையே இருந்த திரையை விலக்கும்படி மன்னன் சேவகர்களுக்கு கட்டளையிட்டான். திரை விலக்கப்பட்டது. மன்னரும், மதிவாணனும் மற்றும் சபையோரும் வியக்க மதிவாணர் வரைந்த ஓவியத்தில் எந்த இடத்திலும் மாறுபடாத ஓவியம் உள்ளூர் ஓவியனுக்கு ஒதுக்கப்பட்ட சுவற்றில் இருந்தது.

மதிவாணன் தனது ஓவியத்தை தீட்டும் பணியில் ஈடுபட்டிருந்த காலத்தில், உள்ளூர் ஓவியன் தனக்களிக்கப்பட்ட சுவற்றை நன்றாகப் பூசி மெருகிட்டு பளபளப்பாக கண்ணாடி போன்று வைத்திருந்தான். அவன் தூரிகையோ அல்லது வர்ணத்தையோ பயன் படுத்தவில்லை. மதிவாணன் வரைந்த ஓவியத்தின் பிரதிபலிப்பே எதிர் சுவரில் பிரதிபலித்தது.

மன்னரும், மதிவாணரும், சபையோரும் உள்ளூர் ஓவியனின் திறனையும், சாதுர்த்தையும் பாராட்டினர்.

இதைப்போல் நமது உள்ளத்தையும், இதயத்தையும் நாம் எப்போதும் சுத்தமாக வைத்துக்கொண்டால், இறைவனது திரு உருவம் நமது உள்ளத்திலும், இதயத்திலும் பிரதிபலிக்கப்படும். உள்ளத்திலும், இதயத்திலும் குடி கொண்ட இறைவன் நமக்கு எப்போதும் துணைபுரிவான் என்பதில் சற்றும் ஐயமில்லை

★

# வேடனும் புறாக்களும்

திரு. வி. ரங்கசுவாமி ஐயங்கார்
திருச்சானூர்.

இராமாயணத்தில் விபீஷணனைச் சேர்க்கக் கூடாதென்று சுக்ரீவன் முதலோர்தடுத்தபொழுது இராமபிரான் அவர்களுக்குக் கூறியகதை இது:

காட்டில் ஒரு மரத்தில் இரண்டு புறாக்கள் வசித்து வந்தன. ஒரு நாள் வேடனொருவன் வலைப்போட்டு அவற்றில் பெண் புறாவை பிடித்துக் கொண்டான். திடீரென்று பெரிய காற்று மழை பெய்தது. வேடன் கையில் அகப்பட்ட பெண் புறாவானது ஆண் புறாவைப் பார்த்து ''நாதனே! இவன் நாம் குடியிருக்கும் மரத்திற்கு வந்ததால் அவன் நம்மை சரணமடைந்ததாயிற்று. ஆகையால் அவனைக்காப்பாற்றுவது நம் கடமையல்லவா? இவன்குளிரால் நடுங்குகிறான். இவன் குளிரை போக்க வேண்டும்'' என்று சொன்ன உடனே ஆண் புறா எங்கேயோ போய் நெருப்பு கொண்டுவந்து சுள்ளிகள் வைத்து மரத்தினடியில் நெருப்பு உண்டாக்கி அவன் குளிர் நீங்கும்படி செய்தது. பிறகு பெண் புறு கணவனைக்கண்டு ''நாதனே! இவனுடைய பசியையும் போக்க வேண்டும்' என்று சொல்ல ஆண் புறு 'என்னைச் சாப்பிடு' என்று கூறி நெருப்பில் விழுந்து விட்டது.

''கேவலம் ஒரு பக்ஷியானது தான் வசிக்கும் மரத்தை அணுகினவனை சரணாகதனாக எண்ணி அவனுக்கு குளிரைப் போக்கி தன் உடலையே உணவாக்கி செய்ததை விட சரணாகத ரக்ஷணம் உண்டா? அப்படியிருக்க தர்மசாஸ்திரகாரராகிய மனுவம்சத்தில் பிறந்து, சரணாகதனுக்கு தன் உடலை அறுத்துக் கொடுத்த சிபி சக்ரவர்த்தியின் பரம்பரையில் சேர்ந்து வசிஷ்டரின் சீடனாயும் உள்ள மனிதனான நான், தாய் நாட்டையும், மனைவிமக்களையும், செல்வத்தையும் விட்டு 'எல்லா உலகங்களையும் காக்கும் உன்னை சரணமடைந்தேன். நீயே கதி' என்று வாயார கூறி தண்டனிட்ட விபீஷணனை விட்டு விடுவேனா? அவனல்ல, என் பகைவனாகிய இராவணனேவந்தாலும் காக்க மனமுள்ளவனாய் இருக்கிறேன். யாரேனும் எங்கிருந்தாயினும் ஒரு தரம் 'நான் உன்னுடையவன் ' என்று சொன்னால் அவன் பாவங்களை எல்லாம் போக்கிக் காப்பேன். இதுதான் என் கொள்கை என்றார் இராமபிரான்.

இதனால் 'சரணம்' என்பவனை தன் உயிரை விட்டாயினும் காக்க வேண்டும் என்பதுதான் இக்கதையின் திரண்ட பொருள்.

★

அண்டர் நாயகனும் அனந்தனைத் தன் நாயகனாகவே சிறுவயது முதலே பாவித்து அவனோடு சிறுமியாய் ஆடிக் களித்துக் கன்னிப் பருவம் எய்தியவுடன் கண்ணனையே தன் கணவனாக அடைய மார்கழி நோன்பு நோற்று, 'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்னோடு உற்றோமே யாமா

# காதற்பாவை

வோம்' என்று, சங்க காலத் தலைவியைப் போலவே, 'இம்மை மாறி மறுமை ஆகினும் நீயாகியரென் கணவன்' என்று நம் நாட்டுப் பெண்மைக்கே ஏற்றம் தரும் வகையில் ஒரு சிறிது காலமே வாழ்ந்து மறைந்த கோதை நாச்சியாரின் பெண்மை யுணர்வை அவரது பாடல்களின் வழி ஒரு சிறிதே உணர்வோம்.

திருப்பாவை என்னும் தமிழ் மாலையைத் தொடுத்து அரங்கனுக்கு அணிவித்த ஆண்டாள், திருமொழி என்னும் 143 பாசுரங்களில் கண்ணனைத் தன் காதலனாக எண்ணிக் கவிதை மழை பொழிகின்றாள். சூடிக் கொடுத்த சுடர்க்கொடி பாடிக் கொடுத்த பாமாலை நமக்கு உணர்த்தும் ஆண்டாளின் மனப் போக்கைக் காண்போம்.

''என் தலைவன் கதிரொளி பரப்பும் மதியம் போல் முகத்தான், அவனது சிவந்த விழிகள் திங்களும் ஆதித்யனும் போன்று விளங்கி உயிர்களைப் புரப்பன. அவனது பங்கயக் கண்கள் சிறிது சிறிதாக திறக்கும் போது தாமரை மலர்வது போன்றிருக்கும். அவனது மேனி நிறம் மேகத்தை யொத்தது. இல்லை இல்லை பூவைப் பூ போன்றது. அதுவும் சரியில்லை. காயாம் பூ நிறத்தை யொத்தது. இல்லை, பாற்கடல் வண்ணன் அவன். எப்படிச் சொன்னாலும் எனக்கு நிறைவில்லையே. நீர் சுமந்த மேகத்தின் கரு நிறத்தை யொத்தவன் என் கண்ணன். ஆமாம் இது தான் சரி. 'கருவுடை முகில் வண்ணன்.' அவன் நாற்றத் துழாய் முடி அணிந்து சங்கு சக்கரம் தடக்கையில் ஏந்தி புறப்பட்டால் என் நெஞ்சமெல்லாம் அழிந்து அவன் பின்னாலேயே சென்று விடுகின்றதே' என்று தன் தலைவனின் நலம்புனைந் துரைக்கிறாள் கோதை. தன் மணாளனின் உருவத்தைப் போலவே அவனது ஒப்பில்லா வீரமும் புகழும் அவளது நெஞ்சை நிறைத்துள்ளது.

''ஆயர்குலத்து அணி விளக்காம் அம்மாதவன் தேவாதி தேவன். ஓங்கி உலகளந்த உத்தமன். உலகினில் தோற்றமாய் நின்ற சுடர். அம் மாமாயன் செய்த மாயங்கள் எண்ணிறந்தன. அவற்றை விரித்துரைத்தல் எங்ஙனம்? அவனைப் போற்றிப்



பாடுகின்றேன். நீங்களே யுணர்ந்து கொள்ளுங்கள்'' என்கின்றாள்பாவை.

" அன்று இவ்வுலகம் அளந்தாய்!
அடி போற்றி!
சென்று அங்குத் தென்னிலங்கை
செற்றாய்! திறல் போற்றி!
பொன்றச் சகடம் உதைத்தாய்!
புகழ் போற்றி!
கன்று குணிலா எறிந்தாய்!
கழல் போற்றி!
குன்று குடையா எடுத்தாய்,
குணம் போற்றி!
வென்று பகை கெடுக்கும் நின்
கையில் வேல் போற்றி!

இத்தகைமையுடையானை என் மனத்துக்கு இனியானை வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்து இருத்தலே என் வாய்மொழிக்குப் பயன், என் பிறவிக்குப் பயன் என்கின்றாள்.

'குறை ஒன்றும் இல்லாத கோவிந்தா நீ அறிவு ஒன்றும் இல்லாத ஆயர்குலத்துப் பிறந்து எமக்குப் புண்ணியம் சேர்த்தாய்' என்று தன்னையும் ஓர் ஆயர்குலச் சிறுமியாகவே உணர்கிறாள் ஆண்டாள். மார்கழி நோன்பு நோற்றவள் தைத் திங்களில் காமனை வழி படுகின்றாள். அந்த ஆயர் குலச்சிறுவன் இவள் சிற்றிலைச் சிதைத்து விளையாடுகின்றான், இவள் நதிக்கரைக்குக் குளிக்கச் சென்றால் உடன் சென்று துகிலைமறைத்து விளையாடுகின்றான் கண்ணன். இப்படி வளர்ந்த இவர்களது நட்புக் காதலாக மாறி பேரன்பாக உழுவலன்பாக மாறி விடுகின்றது. மாயக் கண்ணன் இவளுடன் ஆடி பின் கூடி மறைந்து விடுகின்றான். காதலனைக் காண ஏங்கும் இளங்காதலியின் பொங்கும் ஆசை வெள்ளப் பெருக்காகப் பிரவகித்து ஓடுகின்றது தீஞ்சுவை அமுதமாகிய நாச்சியார் திருமொழியில். காதல்பக்தி கரை புரண்டதால் தன்னை நாயகியாகப் பாவித்துச்சிருங்கார ரசத்தில் அன்பு மீதூரப் பாடிய 143 பாடல்கள் தமிழ்த் தீஞ்சுவைப் பாடல்கள். சிறு வயது முதலே தன் தந்தை விஷ்ணு சித்தர் கட்டி முடித்த பூமாலையைத் தான் சூடி மகிழ்ந்து பின்னர் அரங்கனுக்குச் சூட்டி மகிழ்ந்த பூங்கோதை

திருமதி. ரா. ராதா - திருப்பதி.

பாடிய பாடல்கள் அல்லவா அவை? இறைவன் அவன் சூடிக்கொடுத்த மாலையையே தனக்குகந்ததாக ஏற்ற போது அவள் பாடிக்கொடுத்த பாமாலை புகழ் மணம் பரப்புவதில் வியப்பென்ன? நாச்சியார் திருமொழியில் சிறுமியாகவும் மங்கையாகவும் நின்று கண்ணனை அடைய விரும்பும் பல்வேறு மனநிலையை வெளிப்படுத்துகிறாள் ஆண்டாள். இறுதியில் பிருந்தாவனத்தில் கண்ணனைக் கண்டு ஈடேறுகின்றாள்.

தைத்திங்களில் காமக் கடவுளாம் மன்மதனை வழிபடுகின்றாள் கோதை. 'இறைவனை என்னோடுஇணைத்து வை.

உன்னை வைதிடாமல் முப்போதும் உன் அடி வணங்கி நிற்பேன். வித்த கன் வேங்கடவாணன் என்னும் விளக்கினிற்புக என்னை விதி செய். கேசவ நம்பியின் கால் பிடிக்கும் பேறு எனக்குப் போதும். என் தட முலைகளை அந்தத் துவரைப் பிரா னுக்கே என்று சங்கற்பித்து விட் டேன். அந்தப் பாற்கடல் வண்ண னுக்குப் பணி செய்து வாழப் பெறு விடில் நான் அழுது அழுது அலமந்து போவேன்''

ஊனிடை ஆழிச்சங்கு
உத்தமர்க்கு என்று
உன்னித்து எழுந்த என் தடமுலைகள்
மானிடவர்க்கென்று பேச்சுப்படில்
வாழ்கில்லேன் கண்டாய்மன்மதனே''

என தான் நோற்கின்ற நோன்பின் குறிக்கோளை எடுத்தியம்புகின்றாள். ''மானிடவர்க்கு ஒன்று பேச்சுப் படில் வாழ்கில்லேன்'' என்று சொல் வதில் பெண்மையின் பிடிவாதகுணம் தெரிகின்றது. மனத்தால் ஒருவனை நேசித்துவிடின் பின்பு மாறாத கற்பு நிலை தெரிகின்றது.

விளையாடும் ஆயர் சிறுமியாய் நின்று, 'எங்கள் மேல் இரக்கம் கொள் மாதவா. சிற்றிலைச் சிதை யாதே', என்று வேண்டுகின்றாள். 'நீ நாங்கள் இழைத்தச் சிற்றிலை அழித்தாலும் உன்மேல் எங்கள் உள்ளம் ஓடி உருகல் அல்லால் கோபம் எழவே மாட்டேன் என்கின் றதே. கள்ள மாதவா உன் முகத்தன கண்கள் அல்லவே. அது என்ன மாய மந்திரமோ! உன் பேச்சும் செய்கையும் எங்களை மையல் ஏற்றி மயக்குகின்றதே. சிற்றிலோடு எங் கள் சிந்தையையும் அல்லவா சிதைத்து விடுகின்றாய்!'

கன்னிப் பருவம் எய்தி நீரைக் குடைந்து விளையாடுகையில் கண்ணன் வந்து வம்பு செய்கின்றான். பட்டுத் துகிலை எடுத்து ஒளித்து விடுகின்றான். 'இப்படிப் பொல்லாங்கு செய் கின்றாயே, பலரும் காண்பதற்கு முன்னே கொடுத்துவிடு' என்று கெஞ்சுகின்றாள். சிறு வயதில் உணர்ச்சிகள் பக்குவப்படாத நிலை யில் கண்ணன் மேல் வைத்த அன்பு பின்புக் காதலாக மாறுகிறது. கண்ணன் என்னைக் காண வருவானா? வந்து என்னைப் பற்றித் தன்னொடும் கூட்டிக் கொள்வானா? 'என்று கூடல் இழைத்துப் பார்க்கின்றாள். 'பழம் அழகனார், ஆய்ச்சியர் சிந்தையுள் குழகனார்வரின் கூடிடுகூடலே'' என்று குழல் கோதை ஏங்குகின்றாள்.

'காதல் வந்து கதுவுங்காலை மங்கையர் மனமும் வாக்கும் புளியம் பழமும் தோடும் போலாம்' என்ற வாறு காதல் வயப்பட்ட ஆண்டாள் எதிலும் பற்றில்லாது தண்அம் சோலையில் உலா வருகின்றாள். 'முத்து அன்ன வெண்முறுவல் செய்ய வாயும் முலையும் அழகு அழிந்தேன் நான்' ''என் பொருகயற் கண்ணிணை துஞ்சா'' அன்புடையாரைப் பிரிவு உறுத்தும் நோயது. எனவே குயிலே அந்த வேங்கடவன் வரக் கூவாய்' என்று குயிலினிடத்துக் கெஞ்சு கிறாள். 'இந்தப் பொதும்பரில் நீ வாழ வேண்டுமென்றால் இரண்டில் ஒன்று தீர்மானம் செய்துக்கொள்.' என்று பயமுறுத்துகிறாள். ''ஏ குயிலே! நீ மட்டும் உன் காதலி யோடு வாழ்கின்றாயே! நீ என் கரு மாணிக்கம் வரக் கூவினால் நானே பால் அமுது ஊட்டி வளர்க்கும் கிளி யினை உன்னோடு தோழமை கொள்ளச் செய்வேன்! உலகம் அளந் தான் வரக் கூவுதியேல் என் தலை யையே கைம்மாறாகஅளிப்பேன்' என் றெல்லாம் பலவாறு பிதற்றுகின்றாள். ஏக்கத்தின் எதிரொலியால்,

'' வண்ணந் திரிவும் மனங்குழைவும்
மானமிலாமையும் வாய் வெளுப்பும்
உண்ணலுறாமையும் உள்மெலிவும்''

என உறுப்பு நலன் அழிந்தமைக் கூறு கின்றாள்.

இரவில் கண்ணை மூடி உறங்கலாம் என்றாலோ கனவிலும் கண்ணனே வருகின்றான்.

'' மைத்துனன் நம்பி மதுசூதன்
வந்து என்னைக்
கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன்
தோழீ நான்''

'' இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும்
பற்று ஆனவன்
நம்மை உடையவன் நாராயணன் நம்பி
செம்மை உடைய திருக்கையால் தாள்
பற்றி
அம்மி மிதிக்கக் கனாக் கண்டேன்
தோழீ நான்''

என்று ஏழு பிறவிக்கும் அவனுக்கே பற்று ஆன ஜீவாத்மா இறைவனை அடைய யோகக் கனவு காண்கின் றது. கண் விழித்தவுடன் தான் கண்டது கனவு என்ற நினைவால் தன் தலைவனோடு கூடப் பெறாத ஏக்கம் அதிகரிக்க நாராயணன் தன் பவளச் செவ்வாயினைச் சுவைக்கும் பேறு பெற்ற வலம்புரிச் சங்கினை நினைக் கிறாள். மதுசூதனன் வாயமுதம் நாளும் பருகும் பாஞ்சன்னியம் பெற்ற புண்ணியத்தை எண்ணிப் பொறாமை கொள்கிறாள் ஆண்டாள்.

நாய்ச்சியார் திருமொழியில் 'மேக விடு தூது' என்ற பகுதியில் வரு வனவற்றைக் கற்பில் பிரிவாகக் கொள்ளக் கூடும். களவில் கூடிப் புணர்ச்சியின் சுவை அறிந்து அனு பவித்த பின் மீண்டும் அனுபவிக்க எழும் வேட்கையால் காமத்தீ கொழுந்து விட்டு எரிகின்றது. 'விண் நீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்' என விளித்து தன் நடலைநோயை நாரணனனுக்குத்தெரி வித்துத் தன் ''கொங்கைமேல் குங்கு மத்தின் குழம்பு அழியப் புகுந்து ஒரு நாள் தங்குமேல் என் ஆவி தங்கும்'' என்று விண்ணப்பம் விடுக்கின்றாள்.

பேரொளியாம் பரமன், தலைவன் அவளுள்ளத்தே புகுந்து அவளது உணர்வாகவே ஆகிவிடுகின்றான். அந்த நிலையில் தலைவி எங்கு காணி னும் அவன் உருவத்தையே காண் கின்றாள். குயில்கள், மயில்கள், கரு விளை, வம்பக் களங்கனிகள், காயா மலர்கள் எல்லாம் திருமால் உரு ஒளி காட்டுகின்றன. அவற்றை 'ஐம் பெரும் பாதகர்கள்' என்று வைகின் றாள். அவன் மார்பில் உறங்கும் பேறு பெற்ற மாலைகளோடு நானும் கிடந்து உறங்க வேண்டும் என் கின்றாள்.

'காதல் நோய் செய்த பரிசு' என்ற பகுதியில் அமைந்த பாடல்களில் சுவை மிகுந்த பகுதி என்று எதைக் கூறுவது? எதை விடுவது? காமம்மிக்க கழி படர்க்கிளவி என்றத் துறையின் கீழ் 10பாடல்களையுமே சேர்க்கலாம். எனினும் பிற பாடல்களின்றும் தனித்து நின்று ஒளிவிடும் ஒன்றை மட்டும் எடுத்துக் கூறுவேன். என்னை யும் ஆண்டாளைப் போலவே மெழு

காய் உருக வைத்து மெய் சிலிர்க்க வைத்தப் பாடல் இது.

"மழையே! மழையே! மண்புறம்பூசி
உள்ளாய் நின்று
மெழுகு ஊற்றினாற் போல் ஊற்று
நல்வேங்கடத்து உள்நின்ற
அழகப் பிரானார் தம்மை என்
நெஞ்சத்து அகப்படத்
தழுவநின்று என்னை ததைத்துக்
கொண்டு ஊற்றவும் வல்லையே?"

குவைக்குள், உருக்கிய மெழுகை ஊற்றி உருவம் சமைப்பது போல் மெழுகாய் உருகும் என் நெஞ்சத்து அந்த அழகர் பிரான் உருவம் சமைத்துள்ளேன். என் மனமாகிய குவைக்குள் அவன் அகப்பட்டுக் கிடக்கின்றான். மழையே நீ உருகிய மெழுகாய் மாறி அந்தக் குவைக்குள் ஊற்று என்கின்றாள் ஆண்டாள்.

".........என் அரங்கத்து இன்ன முதர் குழல் அழகர், வாய் அழகர், கண் அழகர், கொப்பூழில் எழு கமலப்பூ அழகர்" அவர் என்னுடைய கழல் வளையைக் கழல் வளையாகச் (கழன்று விழும் வளையாக) செய்து விட்டாரே; என் பெய் வளை மேல் இச்சை உடையாரேல் இத்தெரு வழியே போவாரோ" என்று இற்செறிக்கப்பட்டதுபோல் பேசுகின்றாள். திருவரங்கர் 'தம்மை உகப்பாரைத் தாம் உகப்பர்" என்று என் தந்தை கூறக்கேட்டிருக்கிறேன். ஆனால் இவரோ நான் அவரை உவக்க அவர் என்னை உவவார்' என்கிறாள். பெண்கள் குறை தீர்க்கும் பெருமான் தன்னை நிராகரித்தார் என்று ஆராத காதல் நோய் வாய்பட்டுப் பேசுகின்றாள் ஆண்டாள்.

சீதையின் பிரிவைத் தாளாது இராமன் உண்ணாது உறங்காது கடலில் அணைகட்டி மீட்டார். பூமிதேவிக்காக மானம் இல்லாத பன்றியின் உருவம் எடுத்து இரண்யாக்ஷகனைக் கொன்றுக் காத்தார். சிசுபாலன் தன்தேசு இழந்து வருந்தும் வண்ணம் ருக்மணியை அழைத்து வந்து மணம் புரிந்து கொண்டான். இவ்வாறு பெண்கள் குறையெல்லாம்தீர்த்த 'பெண்ணாளன்' என் குறையை மட்டும் தீர்க்க வரவில்லையே என்று வினவுகிறாள்.

இவளது வார்த்தைகளை அங்கு எவரும் செவி மடுப்பார் இல்லை. மாயவனே வந்து உருக்காட்டுகின்றான். இவளது ஆன்மா விடுதலையடைய விரும்புகின்றது. தாயும், தந்தையும், உற்றாரையும் விடுத்துத் தனியே போயினாள் என்னும் பழிச் சொல் வராமல் இருக்க வேண்டுமானால் என்னை நீங்களே அந்த மதுராபுரிக்கு உய்த்திடுமின் என்று புலம்புகின்றாள். "கூட்டில் இருக்கும் கிளி எப்போதும் 'கோவிந்தா' 'கோவிந்தா' என்று அழைக்கும். அதற்கு உணவு கொடாது செறுப்பின் 'உலகளந்தான்' என்று உயரக் கூவும். என்றால் அதுவும் செய்ய இயலவில்லையே, பெற்றோரும் உற்றோரும் என் நிலையறியாது புறம் பேசுகின்றனரே "புண்ணில் புளிப்பெய்தாற் போலப் புறநின்று அழகு பேசாமல்" அவனது பீதக ஆடையைக் கொணர்ந்து என்மேல் வீசுங்கள். அவன் விரும்பி அணியும் தண்ணந் துழாய் கொணர்ந்து சூட்டுங்கள்' என்று நெஞ்சம் உருக வேண்டுகின்றாள். அவளது நிலையைப் பார்க்கும்போது நமக்கு மிகவும் பரிதாபமாக இருக்கின்றது.

அவளது தீராக் காதல் ஒரு வெறி நிலையையே அவளிடத்து ஏற்படுத்துகின்றது.

"உள்ளே உருகி நைவேனை
உளளோ இலளோ என்னாத
கொள்ளைக் கொள்ளிக் குறும்பனைக்
கோவர்த்தனனைக் கண்டக்கால்
கொள்ளும் பயன் ஒன்று இல்லாத
கொங்கை தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்டு அவன் மார்பில்
எறிந்து என் அழலைத் தீர்வேனோ"

என்று கண்ணகியைப் போல் சூளுரைக்கிறாள். பருந்தாள் களிற்றுக்கு அருள் செய்த பரமன் ஆண்டாளுக்கும் அருள் காட்டுகின்றான். ஆண்டாளது உயர்ந்த ஆன்மீக உறவு அவளுக்குக் கண்ணனை கண் முன் கொணர்ந்து நிறுத்துகிறது. "பீதக ஆடை உடை தாழ, பெருங் கார்மேகக்கன்றே போல்" வந்து ஆண்டாளை ஆட்கொள்ளுகின்றான் கண்ணன்.

பிஞ்சாய்ப் பழுத்த பாவை இங்ஙனம் லௌகிக வாழ்க்கையில் நடைபெற இயலாததைக் கனவு காண்கின்றாளே, இது எங்ஙனம் நடைபெறும் என்று பெரியாழ்வார் பலவாறு வருந்தி, எல்லோரையும் போல் என் பெண்ணிற்குத் திருமணம் செய்வித்துப் பார்க்க எண்ணி நானிருக்க இவள் "மாமணி வண்ணன்மேல் மாலுறுகின்றாளே" என அயர்க்கின்றார். ஆண்டாளிடம் அரங்கநாதனைக் காண வேண்டும் என்ற வேட்கை அதிகரிக்க அவளைப் பல்லக்கில் அமர்த்தி ஸ்ரீ ரங்கம் கோயிலில் கொண்டுவிட அழகிய மணவாளனை விழுந்து வணங்கிய ஆண்டாள் அரங்கனோடு ஒன்றி ஒளியாய்த் தோன்றி மறைந்து போனாள். திருமகள்போல் வளர்ந்த ஆண்டாள் "பெருமகளாய் குடி வாழ்ந்த பெரும்பிள்ளை பெற்ற யசோதைக்கு" மருமகளானாள். செங்கண் மாலை மணந்து கோதை, நாய்ச்சியார் ஆனாள்.



## கவனத்திற்கு!

இன்றைய இந்திய இளைஞர்களின் இளம் உள்ளங்களுக்கு ஆன்மீக, அற ஒழுக்கத்தின் அடிப்படை அவசியத்தையும், இந்தியக்கலை மற்றும் கலாசாரத்தின் பெருமையையும் உணர்த்திடும் வகையில், 'ஸப்தகிரி'யில் விரைவில் 'இளைஞர் பகுதி' எனும் புதிய பகுதி ஆரம்பிக்கப்பட உள்ளது. ஆகவே எழுத்தாளர்கள் இதனை ஓர் அரிய வாய்ப்பாகக் கொண்டு, தங்கள் கட்டுரைகளை ஸப்தகிரிக்கு அனுப்பி வைக்குமாறு கோருகின்றோம். பிரசுரிக்கப்படும் கட்டுரைகளுக்குத் தகுந்த சன்மானமும் வழங்கப்படும்.

ஆ-ர்.

# திருப்பாவையில் திருவேங்கடவன்

ஸ்ரீய : பதியான ஸர்வேச்வரன், பர, வியூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை ஆகிய ஐந்து நிலைகளில் தன்னைத் தானே காட்டக் கண்டவர்கள் ஆழ்வார்கள். அவர்களுள் ஒரு மகள் தன்னையுடையவராய் உலகம் நிறைந்த புகழால் திருமகளாகப் பெரியாழ்வார் வளர்த்த புதல்வியான ஆண்டாள் பிறந்தது முதற்கொண்டு பகவத் குணங்களிலே மூழ்கி, தானே சென்று திருப்பாவை என்னும் முப்பது பாசுரங்களால் எம்பெருமானை எழுப்பித் தன் குறையை அறிவித்தவள். மார்கழி நீராட என்று ஒரு வ்யாஜத்தைக் கொண்டு, நோன்பு என்று ஒரு வ்யாஜத்தாலே எம்பெருமான் பக்கலிலே சென்று 'உனக்குச் சேஷமாய் இருக்கிற இந்த ஆத்மா அநர்த்தப்படாதபடி பண்ணி, இதுக்கு ஸ்வரூபமான கைங்கர்யங்களைக் கொடுத்து. அதுதானும் யாவதாத்ம பாவியாம்படி பண்ணியருள வேணும்' என்று அபேக்ஷிப்பதுதான் திருப்பாவைக்குக் கருத்து என்று அதன் வ்யாக்யான அவதாரிகையில் பரம காருணிகரான பெரியவாச்சான் பிள்ளை குறிப்பிடுகிறார்.

சாதாரணமாக எல்லா ஆழ்வார்களின் பாசுரங்களுக்கும் தனியன் அருளிய ஆசார்யர்கள் அப்பிரபந்தங்களையும் அவ்வவ் ஆழ்வார்களைப் பற்றியும் பேசி அனுபவித்துள்ளனர். ஆனால் திருப்பாவைக்குத் தனியன் அருளிய உய்யக்கொண்டாரோ, ஆண்டாளின் திருவுள்ளக்கருத்தை,



"சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே !
தொல்பாவை
பாடியருள வல்ல பல்வளையாய்!—
நாடிநீ
வேங்கடவற்கு என்னை விதியென்ற
இம்மாற்றம்
நாம் கடவா வண்ணமே நல்கு".

என்று அனுபவிக்கிறார். அதாவது மன்மதனைக் குறித்து சூடிக்கொடுத்த சுடர்க்கொடியான ஆண்டாள் தன்னை வேங்கடவனுக்கு ஆட்செய்யும்படி செய்யவேணும் என்று வேண்டுவதை உய்யக் கொண்டார் காட்டுகிறார். மேலும், கிருஷ்ணவதாரம் செய்தருளின பெருமானும், திருவேங்கடமுடையானும் ஒரே வ்யக்திதான் என்று நம் பூர்வர்கள் நம்புவர். பரமகாருணிகரான பெரிவாச்சான் பிள்ளையும், மற்றும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் அருளிய மூவாயிரப்படி, ஆறாயிரப்படி வ்யாக்யானங்களில் பெரியாழ்வாரோடு மற்ற ஆழ்வார்களையும் தகப்பன்மார்களாக ஆண்டாள் கருதியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆதலால் திருப்பாவையில் வரும் திருநாமங்களை, மற்ற ஆழ்வார்கள் திருவேங்கடவன் விஷயமாக அனுபவித்துப்பாடிய பாசுரங்களில் வரும் திருநாமங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, ஓரளவிற்கு ஆண்டாள் திருப்பாவையில் திருவேங்கடவனைக் குறித்துள்ளதாக நினைக்க இடமுண்டு.

ஆக, ஆழ்வார்களின் அருளிச்செயல்களையும் அவற்றிற்குள்ள ஆசார்யர்களின் வ்யாக்யானங்களையும் கொண்டு, திருப்பாவையில் ஆண்டாள் அருளிய சிற்சில திருநாமங்கள் திருவேங்கடவனின் நாமங்களுக்குப் பொருத்தமாக அமைந்துள்ளதைக் கீழ்க்காணலாம்.

**நாராயணனே நமக்கே பறைதருவான்**

எம்பெருமானுடைய திருநாமம் சொன்னாருடைய பாபங்களைப் போக்குகைக்காகத் திருமலையிலே வந்து கிட்டினவனை அனுபவிக்கத் திருவுள்ளம் பற்றி,

"பேசுமின் திருநாமம் எட்டெழுத்தும்
சொல்லி நின்று பின்னரும்
பேசுவார் தமை உய்ய வாங்கிப் பிறப்
பறுக்கும் பிரானிடம்
......திருவேங்கடம் அடை நெஞ்சமே'

என்று (1–8–9, பெரிய திருமொழி) திருமங்கை மன்னன் அனுபவிக்கிறார். அதாவது திருவஷ்டாக்ஷரமந்திரமான நாராயண நாமத்தைச் சொல்லுமவர்களின் பிறவியைத் தொலைத்து அவர்களை ஆட்கொள்ளும் எம்பெருமான் திருவேங்கடவனே என்று அனுபவிக்கிறார். ஆகையால், இத்திருவஷ்டாக்ஷரத்தில் 'நாராயணாய' என்கிற சொல் திருவேங்கடவனுக்கே உரிய பெயர் என விளங்குகிறதல்லவா? அப்படிப்பட்ட நாராயணனே நமக்கு பறையாகிய கைங்கர்யத்தைத் தருவதாத ஆண்டாள் அனுபவிக்கிறாள்.

**பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்**

சங்குகளையுடைய விசாலமான திருப்பாற்கடலிலே சயனித்து இருக்கின்ற புண்டரீகாக்ஷனான நாதனே கண்ணனாக அவதரித்துப் பின்னர் திருவேங்கடவனாக சேவை ஸாதிக்கிறான் என்கிற ஐக்கியத்தை

" .. ... ...
சங்குதங்கு தடங்கடல் துயில்கொண்ட
தாமரைக் கண்ணினன்
... ... ... ... ...
... ... ... திருவேங்கடம் அடை
நெஞ்சமே"

(1-8-1, பெரிய திருமொழி) என்கிற தொடரால் திருவேங்கடவனை திருமங்கை மன்னன் அனுபவிக்கிறார். அப்படிப்பட்ட திருவேங்கடவனையே ஆண்டாளும் "பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்" என்று விளக்குகிறாள்.

**ஓங்கி உலகளந்த உத்தமன்**

திருமங்கை மன்னன் திருவேங்கடவனை,

'' ... ... ... வேள்வியில் சென்று,
மாணியாய்
மண்கையால் இரந்தான் ......
..........................
............ திருவேங்கடம் அடை
நெஞ்சமே''

(1-8-5, பெரிய திருமொழி) என்று அனுபவிக்கிறார். மேலும், பொய்கையாழ்வார்.

'இடந்ததுபூமி எடுத்தது குன்றம்
கடந்தது கஞ்சனை முன்னஞ்ச—கிடந்ததுவும்
நீரோத மாகடலே நின்றதுவும் வேங்கடமே
பேரோத வண்ணர்பெரிது'.

(முதல் திருவந்தாதி 39)

என்றும்,

'வழிநின்று..........................
.......................................
...................... மண்ணளந்த
சீரான் திருவேங்கடம்'

(முதல் திருவந்தாதி 76)

என்றும் அனுபவிக்கிறார். அப்படிப்பட்ட மண்ணளந்த சீராளன வேங்கடவனையே ஆண்டாள் திருப்பாவையில் 'ஓங்கியளந்த உத்தமன்' என்று அனுபவிக்கிறாள்.

**மாயன்**

தன்னை உகவாதார்க்கு எட்டாதவனும் தன்னை உகந்தார்க்கு கையாளாயும் இருக்கும் எம்பெருமான் எல்லாவித ஆச்சரிய குண சேஷ்டிதங்களைக் கொண்டு தன் சிந்தனையில்,

'சேயன் அணியன் என சிந்தையுள் நின்ற
மாயன் ..........................
.......................................
.......................................

(1-10-8, பெரிய திருமொழி)

என்று திருவேங்கடவனை அனுபவிக்கிறார் திருமங்கை மன்னன். அப்படிப்பட்ட மாயனையன்றோ ஆண்டாள் திருப்பாவையில் அனுபவித்தது.

**ஆயர்குலத்தினில் தோன்றும் அணிவிளக்கு**

'' சேயன்..................................
...........................

. . . . .வேங்கடமலை கோயில் மேவிய
ஆயர்நாயகற்கு அன்று அடிமைத்
தொழில் பூண்டாயே''

(2-1-8, பெரிய திருமொழி)

என்கிற தொடரால் வெளுத்த முத்துக்களைச் சொரியுமிடமான திருமலையைக் கோயிலாக விரும்பிய அணிவிளக்கான ஆயர் நாயகனுக்கு—ஸ்ரீகோபால கிருஷ்ணனுக்கு நெஞ்சானது அடிமைத் தொழில் பூண்டதாக உகந்து பேசுகிறார் திருமங்கை மன்னன். மேலும் கிருஷ்ணவதாரம் செய்தருளிய எம்பெருமானும் திருவேங்கடவனுக்கும் ஒரே வ்யத்தி தான் என்று தோன்றுவதற்காக 'ஆயர் நாயகற்கு' என்று அருளினார் என்று ஸ்ரீகாஞ்சீஸ்வாமி அனுபவிக்கிறார். அத்தகைய எம்பெருமானை 'ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கு' என மொழிகிறாள் ஆண்டாள்.

**தாயைக்குடல் விளக்கஞ் செய்த தாமோதரன்**

இவ்விடத்தில் 'தாமோதரன்' என்கிற சொல்லை, திருவாய்மொழியில் நம்மாழ்வார்,

'' .......................
.......................
. . . . என் அமுதம் கார்முகில்போலும் வேங்கடநல்
வெற்பன்—விசும்போர்பிரான்
எந்தை தாமோதரனே''.

(2-7-11, திருவாய்மொழி)

என்று அனுபவிக்கிறார். அதாவது ஆகாசத்தளவு உயர்ந்து விளங்கும்படி உயர்ந்த வேங்கடத்தில் இருக்கும் தமக்குத்தந்தையான தாமோதரனே என்று அனுபவிக்கிறார்.

**வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்து**

குலசேகரப் பெருமான் தனது திருமொழியில் (4–4) திருவேங்கடவனை,

'ஒண்பவள வேலையுலவுதண் பாற்கடலுள்
கண்துயிலும் மாயோன் கழலிணைகள்
காண்பதற்கு
. . . . . . . . . . . . . .''

என்று போற்றுகிறார். ஒளிமிக்க பவளங்களைக் கரையிலே கொண்டு வந்து கொழிக்கிற குளிர்ந்த திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளுகிற ஆச்சரியபூதனை திருவேங்கடவனை 'வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்து' என்று ஆண்டாள் கூறுவது மிகப்பொருந்தும்.

*திரு. மா. வரதராஜன் - திருப்பதி*



**மாவாய் பிளந்தானை**

'' மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான்-மற்றும்
நினைப்பரிய நீளரங்கத்துள்ளான்—எனைப்பலரும்
தேவாதி தேவனெனப்படுவான் முன்னொருநாள்
மாவாய் பிளந்த மகன்''

(இரண்டாந்திருவந்தாதி 28)

என்று தனது திருவுள்ளத்திலே முன்பொருநாள் ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித்தபோது குதிரையுருக் கொண்டு வந்த கேசியின் வாயைப் பிளந்த சிறு பிள்ளையாகத் திருவேங்கடவனைப் பூதத்தாழ்வார் நினைக்கிறார். அப்படிப்பட்ட வேங்கடவனை 'மாவாய் பிளந்தானை' என்று ஆண்டாள் மொழிவது இங்கு நன்கு பொருந்தும்.

**தேவாதி தேவன்**

பூதத்தாழ்வார் இரண்டாந் திருவந்தாதியில் (28)

''எனைப்பலரும் தேவாதி தேவன் எனப்படுவான்....! என்று திருவேங்கடவனைப் போற்றுகிறார்; ஆண்டாள் இச்சொல்லை நிரூபித்துக் காட்டுகிறாள்.

**மனத்துக்கினியான்**

திருவேங்கடவன் விஷயமாக திருவாய்மொழியில் (6–10-3) நம்மாழ்வார்,

'........
எண்ணம் புகுந்து தித்திக்கும்
அமுதே!
........... திருவேங்கடத்தானே!

என்று அனுபவிப்பது காண்க.

**மாமாயன் மாதவன்**

திருமங்கையாழ்வார் பெரி திரு மொழியில் (1-9-9) திருவேங்கடவன் தன்னை ஆட்கொள்ளக் கருதி,

''பற்றேல் ஒன்றுமிலேன் பாவமே
செய்து பாவியானேன்
மற்றேலொன்றறியேன் மாயனே!
எங்கள் மாதவனே!
.................. வேங்கடவா
..............................''

என்று வேண்டுகிறார். அப்படிப்பட்ட திருவேங்கடவனை மாமாயன், மாதவன் என்று திருப்பாவையில் ஆண்டாள் குறிப்பிடுகிறாள்.

**சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்**

குலசேகரப் பெருமாள் தனது திருமொழியில் (4–1) திருவேங்கடவனின் கையில் இருக்கும் சங்கு சக்கரங்களைக் கூறும் வகையில்,

'ஊனேறு.........................
..................................
கூனேறு சங்கமிடத்தான்றன்
வேங்கடத்து
...............................''

என்று சங்கின் இருப்பிடத்தையும்,

'' பின்னிட்ட................
.........................
மின்வட்டச் சுடராழி வேங்கடக்கோன்..
...................... (4–3)

என்று சக்கரத்தின் பெருமையையும் கூறுகிறார். அப்படிப்பட்ட எம்பெருமானை "சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்" என்று ஆண்டாள் கூறத் தட்டில்லை.

**மணி வண்ணன்**

திருமங்கையாழ்வார் பெரிய திரு மொழியில் (1-8-2)

'' பள்ளியாவது...............
.............................
வெள்ளியான் கரியான் மணிநிற
வண்ணனென்றெண்ணி
...............நெஞ்சமே.''

என்று வேங்கடவனைப் பாரித்துப் பேசுகிறார். மேலும், பெரிய திரு மொழியில் (1-10-10).

'' வில்லார் மலி வேங்கடமாமலைமேய
மல்லார் திரடோள் மணிவண்ணனம்
மானை
.............................
.........வானவர் ஆகுவர்தாமே.''

என்று அருளுகிறார். ஆக, அத்திருவேங்கடவனையே ஆண்டாளும் மணிவண்ணா என்று அழைப்பது பொருந்தும்.

**உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே!**

திருவேங்கடவன் விஷயமாக நம்மாழ்வார் திருவாய் மொழியில் அனுபவிப்பது மிகவும் அற்புதம். திருவாய் மொழியில் (6-10-1) '...நிலவும் சுடர் சூழொளி மூர்த்தி' என்றும், 'பரஞ்சுடர் சோதிக்கே!' (3-3-4) என்றும், 'சோதியாகி எல்லா வுலகும் தொழும் ஆதிமூர்த்தி' (3-3-5) என்றும் ஆழ்வார் அருளுகிறார். மேலும், திருமங்கை மன்னனும் தனது திருமொழியில் (1-10-9) 'நந்தாத கொழுஞ்சுடரே!' என்று திருவேங்கடவனைப் போற்றுகிறார். ஆக, இவ்வாழ்வார்களின் பாடல்களும் ஆண்டாளின் திருப்பாவையில் அருளிய இத்தொடரும் திருவேங்கடவனுக்குப் பொருந்தும் என்று நினைக்க இடமுண்டு.

**ஆலினிலையாய்!**

''எண்திசைகளும் ஏழுலகும் வாங்கிப்
பொன் வயிற்றில் பெய்து
பண்டோராலிலைப்பள்ளிகொண்டவன்..
.........................
............திருவேங்கடம் அடை
நெஞ்சமே.''
(பெரிய திருமொழி 1-8-6)

என்று திருவேங்கடவன் விஷயமாகத் திருமங்கை மன்னன் மிகவும் அழகாகப் போற்றுகிறார். அவன் தன்னையே ஆண்டாளும் 'ஆலினிலையாய் அருள்' என்று வேண்டுகிறாள். மேலும்,

' நீரார் கடலும் நிலனும் முழுதுண்டு
ஏராலமிளந்தளிர்மேல் துயிலெந்
தாய்......'
(பெரிய திருமொழி 1-10-3)

என்று அருளியதையும் காண்க.

**மாலே!**

பெரியாழ்வார் திருமொழியில் (3-3-4).

'' கடியார் பொழிலணி வேங்கடவா
கரும் போரேறே
நீயுகக்கும் குடையும் செருப்பும்
குழலும் தருவிக்கக் கொள்ளாதே
போனாய் மாலே!''

என்று கண்ணனின் விளையாட்டிலே ஈடுபட்டு வேங்கடவனை எண்ணுகிறார் 'மாலே' என்று. அவ்வாறே திருப்பாவையில் 'மாலே' என்று ஆண்டாள் அழைப்பது திருவேங்கடவனுக்கும் பொருந்தும்.

ஆக, திருப்பாவையிலுள்ள மற்ற திருநாமங்களும் திருவேங்கடவனுக்குப் பொருந்தும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

பாதகங்கள் தீர்க்கும், பரமனடி காட்டும், வேதமனைத்துக்கும் வித்தாக இருக்கும் திருப்பாவையை திருவேங்கடவனை நினைத்து நாடோறும் சொல்லி வணங்குவோமாக.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

## கர்ப்பரக்ஷை

தஞ்சை மாவட்டம் திருக்கருவூரிலுள்ள ஸ்ரீ கர்ப்பரக்ஷாம்பிகை ஆலயத்தில் அர்த்தமண்டபப் படியைப் பசு நெய்யால் மொழுகி, கோலமிட்டுப் பிரார்த்திக்கும் பெண்கள் மலடு நீங்கிப் புத்ரபாக்யம் பெற்றுவிடுகின்றனர். குறைப்பிரசவம், குழந்தை இறந்து பிறத்தல் ஆகியவை இம்மாதரைப் பாதிப்பதில்லை. கோயிலில் மந்திரித்துக் கொடுக்கப்படும் விளக்கெண்ணெயைப் பிரசவ சமயத்தில் உபயோகிக்க சுகப் பிரசவம் நிச்சயம்.

—தகவல்; பாலாதாஸன்.

# கோதை அருளிய கீதை

பகவான் அருளிய கீதைக்கும் ஆண்டாள் அருளிச் செய்த திருப் பாவைக்கும் பல விதங்களில் ஒப்புச் சொல்லலாம். கீதை என்பது ஸ்ரீ பகவத் கீதைக்கு இடுகுறிப்பெயராகு மாப்போல, சங்கத் தமிழ் மாலையாகிய திருப்பாவையும் பாட வல்ல நாச்சியார் பாடின காரணத் தால் கீதை எனப்பெயருடத் தகும். பொருளை கவனித்தாலும் இரண்டு கீதைகளுக்கும் ஈடு நன்கு தோன்றும். அத்யாயம்தோறும் இறுதியில் காணும் "इति श्री भगवद्गीतासु उपनिषत्सु ब्रह्मविद्यायां" இதி ஸ்ரீ பகவத் கீதாஸு உபநிஷத்ஸு ப்ரஹ்ம வித்யாயாம்'' என்னும் அடை மொழிகள் பகவத் கீதையின் மகுடங்கள். 'गीतासु' கீதாஸு என்கிற பன்மையால் ஒவ் வொரு அத்யாயமும் ஒரு கீதை என்னலாம். அம்மாதிரியே பாமாலை யாகிய திருப்பாவையில் ஒவ்வொரு பாட்டும் ஒரு பூவாக ஆண்டாள் சமர்ப்பித்தபடி, உபநிஷத்துக்களைத் திரட்டி அவைகளின் ஸாரார்த்தத் தைத் தெளிவிப்பதால், வேதங்க ளுக்கு உபநிஷத்துக்கள் போல, ஐந் தாம் வேதமாகிய மகா பாரதத்துக்கு பகவத் கீதை உபநிஷத் எனப்படு கிறது. அது போலவே த்ராவிட வேதமாகிய நாலாயிரத்தில் திருப் பாவை ஒரு உபநிஷத்தாகும். உப நிஷத்துக்களெல்லாம் ப்ரதிபாதிப் பது ப்ரம்ம வித்தையே. அதாவது பூர்வ காண்டத்தில் சொல்லப்பட்ட கேவல கர்மாநுஷ்டானத்துக்கு விலக்ஷணமான ப்ரம்மாநுபவமே. திருப்பாவையிலும் நீராட்டமாக ஆரம்பித்த கார்யம், நிரந்தர ப்ரம் மாநுபவமாக முடிகிறது. ஆகையால் திருப்பாவையும் ப்ரம்ம வித்யா ப்ரதி பாதகம் என்னத் தட்டில்லை.

இந்த ஒற்றுமையை இன்னம் சற்று விவரிப்போம், பகவத் கீதை ஸ்வதர் மாநுஷ்டானத்தாலும், ஞான வைராக்கியங்களாலும் உண்டாகக் கூடிய பக்தி ஒன்றுக்கே வச்யனை பரப்ரம்மமாகிய நாராயணனைப் பரக்கச் சொல்லுகிறது, நாராயண சப்தத்தால் தேர்ந்த அர்த்தம், அவனுக்கும் அவனால் படைத்து அளித்துக் கொடுக்கப்படும் ஜகத்துக் கும் உள்ள ஸம்பந்தமே. அந்த ஸம் பந்த உணர்ச்சியே அவனிடம் பக்திக் குக் காரணம். அதுவே அவன் நம்மைப் பற்றுகைக்கும் காரணம். இதை நன்றாக விவரிப்பதுதான் கண் ணன் உபதேசித்த கீதையின் நோக்கு. திருப்பாவைக்கும் விஷயம் ஸ்ரீமந் நாராயணனே. அவன் ஒருவன்தான் நம்முடைய புருஷார்த்தத்தைத் தரு பவன் என்று முதற் பாட்டிலேயே ஆண்டாள் உறுதி கூறுகிறாள். தாங் கள் உத்யோகித்த நோன்பும். இதர தெய்வங்களும் இருக்க, நாராயண னே பறை தருவான் என்றதால், தாங்கள் செய்யும் கார்யங்களுக்கு பலன் அளிப்பவன் அவனே என்றதா யிற்று. ''நமக்கே பறை தருவான்'' என்றதால், பிறருக்கன்று என்று ஏற்படுகிறது. பிறராகிறார் அவனிட மிருந்து தங்கள் கார்யங்களுக்கு கைக்கூலி கொண்டு அகலும் ஸம் ஸாரிகளும் தேவர்களும் போல்வார். அவர்களில் திருப்பாவை பாடிய சிறுமியர்கள் விலக்ஷணர்கள். நாட் டுக்காக நன் மழையை உத்தேசித் தும், இற்றைப் பறை கொள்வார்க என்று எற்றைக்கும் உன்றன்னோடு உற்றோமே யாவோம், உனக்கே நாம் ஆட்செய்வோம் என்றும் பறையறி வித்த ஆய்ச்சியர்கள் ''நமக்கே'' என்று தங்களை சிறப்பித்துச் சொன் னது மிகவும் பொருத்த முடையது. இம்மாதிரி அனுபவிக்க அவர்கள் செய்த புண்யம் யாது என்பதையும் சொல்லுகிறார்கள். தாங்கள் பிறந்த குலத்திலே அவனும் பிறக்கையாகிற புண்ணியத்தை இட்டு, இருவருக்கும் உள்ள ஒழிக்க வொழியாத உறவு தான் என்கிறார்கள். இதுதான் கீதையில் விவரிக்கப்பட்ட நாராயண சப்தத்தின் பொருளாதலால் திருப் பாவைக்கும் ஸ்ரீபகவத்கீதைக்கும் விஷயம் ஸ்ரீமந் நாராயணனே என்று ஏற்படுகிறது.

மேலும் உபதேசமாக இருக்கும் கீதைக்கும் அனுஷ்டான அனுபவ ப்ரார்த்தனாரூபமான திருப்பாவைக் கும் உட்பொருளைக் கொண்டும் ஒற்றுமை சொல்லலாம். கீதையில் பகவான் தன் ஸ்வரூப ரூபகுண விபூதிகளை விஸ்தரித்தது மல்லாமல் தன்னை அடையும் வழிகளையும் அர் ஜுனனுக்கு உபதேசிக்கிறான். அவ் வழிகள்தான் கர்ம ஞான பக்தி யோகங்களும் ப்ரபத்தியும். கர்ம யோகத்தை விவரிக்குமிடத்து, கேவல கர்மிகள் என்றும், கர்ம யோகிகள் என்றும் சேதனர்களைப் பிரித்துக் காட்டுகிறான். சாஸ்திரங் களில் சொல்லப்பட்ட கர்மங்களை அனுஷ்டிக்குமிடத்து, அவைகளும் ஞானத்தை உட்கொண்டவைகள், ஞானஸாதனங்கள் என்று தெரிந்து செய்கிறவர்கள் கர்ம யோகிகள் எனப்படுவர். அந்த ஞானமும் இரு வகை யாகும். அநித்யமான ப்ரக்ரு தியை விட்டு, நித்யமான ஆத்மா வேறு பட்டது என்னும் ஸாமான்ய ஞானம் ஒருவகை. அத்தகைய நித்ய மான ஆத்மாவும் அவனுக்கு அடிமை என்றும், அவன் உகப்பே புருஷார்த் தம் என்றும் ஏற்படும் பக்தி ரூபா பன்னஞானம் மற்றொருவகை. ப்ரக்ரு தியை விட்டு வேறுபட்ட ஆத்மா, தன்னுடைய நிலையில் கால் தாழா மல் அவனளவும் சென்று அவனுடன் கூடி இருத்தலே அதன் ஸ்வரூபம் என்பதுஆத்மாவைப் பற்றிய ஞானத் தின் பூர்த்தி. இத்தகைய ஞானத் துடனும் பக்தியுடனும் செய்யும் கிரி யைகள் அவன் உகப்புக்காக, அவன் ஆராதன ரூபமாக அமைகின்றன என்று கர்ம ஞான பக்திகளின் ஸ்வ ரூபம் கீதையில் நிரூபிக்கப்படுகிறது. இந்த மூன்று வழிகளுக்கும் மேம் பட்ட தாயும், எல்லா வகைகளிலும் அவைகளினின்றும்வேறுபட்டதாயும் உள்ள ப்ரபத்தி என்னும் மார்க் கத்தை கீதையில் இறுதி மொழி யாகக் கண்ணன் கூறுகிறான். சேதனன் விரோதியாகிற ப்ரக்ருதி, கூடு பூரித்த தன்னுடைய பாபங்கள்,

திரு.ஸி.எஸ். பார்த்தஸாரதி அய்யங்கார்,
சென்னை-5

இவைகளை நோக்கித் தன் அசக்தி, அஞ்ஞானம் இவைகளையும் பார்த்து துக்கப்படாமல், ஸர்வ சக்தனும், தன்னைச் சரணடைந்தவர்களை அவர்கள் குற்றம் குறைபாராமல் காப்பாற்றும் வ்ரதத்தை மேற்கொண்டவனும் உள்ள ஸர்வேச்வரனை அடிபணிந்து அவனிட்ட வழக்காக இருப்பதே ப்ரபத்தி நிலை. இது ஸர்வாதிகாரம். இதற்கு தேச கால நியமமில்லை என்பதுதான் கீதையின் தேர்ந்த பொருள்.

திருப்பாவையிலும் இவ்வர்த்தங்கள் பொலிந்திருப்பதைக் கவனிக்கலாம். கோபியர்கள் நோன்பு என்னும் க்ரியையில் ஆரம்பிக்கிறார்கள். இந்த க்ரியை என்பது வ்யாஜம். அவர்களின் முக்கிய நோக்கு கண்ணனைப் பலபடியாகப் பாடி அனுபவிக்கைதான். ஆகையால் அவனை உகப்பிக்கச் செய்யும் கார்யமாக இருக்கும் நோன்பு, அவனுக்கு ஒரு கைங்கர்யமாகவும், அவனுடைய ஆராதன ரூபமாகவும் இருப்பதால், பகவத்கீதையில் சொன்ன கர்ம யோகிகளின் நிலையை கோபியர்கள் உதாஹரிப்பதாகக் கொள்ளலாம். அவர்கள் ஞானமோ ப்ரக்ருத்யாத்ம விவேகத்தால் வந்தது எனக் கொள்ளுவதற்கு இடமில்லை. ஞான யோகத்தை அனுஷ்டிக்க அவர்கள் அதிகாரிகளல்லர். ஆனால் ஸர்வேச்வரன் அவர்கள் குலத்தில் அவதரித்தவன், அவர்கள் தன்னுடைய பந்துக்கள் என்று, அவனே சொல்லும் பாக்கியம் பெற்றவர்கள். நம் போல்வாருக்கு அவன் ஸம்பந்த ஞானம் அவன் அருளால் பெற வேண்டும். இவ்வாய்ச்சியர்களுக்கோ அந்த ஞானம் உடன் பிறந்தே தோன்றியதால்,ஞான யோக ஸாத்யமான பக்தியை ஒரு ஸாதனத்தின்மூலமாக அடைந்தவர்களன்று. ஞானமும் பக்தியும் ஒருங்கே சேர்ந்து பிறவியிலேயே ஏற்றம் அடைந்தவர்கள் கோபிகள். பகவத்கீதையில் சொன்ன ஞான பக்தி யோகிகளுக்கு அவர்கள் மேம்பட்டவர்களே. இவ்விதம் ஒழிக்க ஒழியாதஸம்பந்தத்தை அவனுக்கே உணர்த்தி, தங்களுடைய நோன்புக்குப் பறை கொண்டு அகலாமல், அவனுடன் பிறவிதோறும் கூடி இருந்து குற்றேவல் செய்வதே தங்கள் ஸத்தை என்று கூறும் ஆய்ச்சியச் சிறுமியர்கள், ப்ரப்பன்னரிலும் தலைவர்கள் என்னக் குறையில்லை. ஆக, பகவத்கீதையில் உபதேசித்த தத்வார்த்தத்தைத் தங்கள் அனுஷ்டானத்தினால் வெளிப்படுத்தும் கோபியர்கள் பறை கொண்டவாற்றைச் சொல்லும் ஆண்டாளின் கீதை பகவத் கீதையைப் போல ஸர்வர்க்கும் உபஜீவ்யம் என்றதாயிற்று.

இன்னும் ஒரு வகையாலும் இவ்விரண்டு கீதைகளுக்கும் ஒப்புச் சொல்லலாம். கண்ணன் தன்னுடைய கீதையில் பக்தியின் பெருமையைச் சொல்லி வருகையில் பக்தர்களின் நிலையையும் அவர்கள் தன்னை பஜிக்கும் வகைகளையும் பற்றி ஒரு ச்லோகம் இடுகிறான். என்னிடத்தில் மனதை வைத்திருப்பவர்கள்(வ்யாஸ பராசராதிகளைப் போல), என்னை உயிராகக் கொண்டவர்கள் ( பிரியில் தரியாத ஆழ்வார்களைப் போல), (பிரிவில்) என்னைப்பற்றிச் சொல்லியும் கேட்டும் சந்தோஷமும் ஆனந்தமும் பெற்று தரித்து இருப்பவர்கள் (தாய் தோழி நாயகி அவஸ்தைகளை அடைந்து பேசும் நம்மாழ்வார் போல) என்று பக்தர்களை விவரிக்கிறான். பகவதனுபவம்தான் கலவியும் பிரிவுமாக நடக்கும். கலவியில் தனிமைத் தேட்டம், பிரிவில் திரள் தேட்டம் என்பதை ஆழ்வார்களும் கோபியர்களும் நமக்குக் காட்டுகிறார்கள். திருப்பாவையில் இந்த அனுபவம் அமைந்திருப்பதை நாம் கவனிக்க வேண்டும். கண் வளர்ந்தருளும் ஸர்வேச்வரனை எழுப்புவதில் ஆய்ச்சியர் ஒருப்படுகிறார்கள். அதற்காக திரள் திரளாகச் சென்று கூட்டம் கூட்டுகிறார்கள். திரளில் வராத சிலர் இருப்பதாகவும் அவர்கள் உண்மையாகவோ கள்ளத்தனமாகவோ துயிலமர்ந்திருப்தாகவும் அவர்களை எழுப்பித் தங்களுடன் சேர்த்துக் கொள்ளுகிறார்கள். அப்படி எழுப்பப்பட்டவர்களுக்குப் பத்துப் பாசுரங்கள் இட்டிருப்பதால், ஆழ்வார்களை அப்பாட்டுக்களில் எழுப்புவதாக உரைகளில் காண்கிறோம். உண்மையில் ஆழ்வார்களுக்கு உறக்கம் ஏது? அவர்கள் தனிமையில் துயிலமர்ந்து இருப்பதாகச் சொல்லுவதைப் பார்த்தால், கலவியில் தனிப்பட்டு பேச்சு வார்த்தைகள் இல்லாமல் அயர்ந்து தூங்குகிறவர்கள் போல பரிபூர்ண ப்ரம்மாநுபவத்தில் ஆழ்ந்து கிடக்கிறார்கள் என்று கொள்ளலாம். பிரிவில் நோவுபட்ட கோபிகள், இவ்வாழ்வர்கள் தங்கள் தனிமையாகிற துயிலைத் தவிர்ந்து அவர்களுடன் சேர்ந்து எல்லாருமாக எம்பெருமானை அடைய வேண்டும் என்ற கருத்துடன் அவர்களையும் எழுப்புவது யுக்தமே. ஸமான ப்ரக்ருதிகளாக இருக்கும் ஆழ்வார்களும், கோபியர்களும் ஒரு படையாக எம்பெருமானிடம் சென்று தங்கள் நிலையை அவனுக்கு உணர்த்துவது திருப்பாவையின் மூலம் காணலாம். ஸ்வப்ர பந்தங்களில் ஒவ்வொரு ஆழ்வாரும் பலவிதமாகத் தங்கள் அனுபவத்தின் ஊற்றத்தைப் பாடுகிறார்கள். திருப்பாவையில் எல்லாரும் சேர்ந்து ஏககண்டகளாக ''என்றும் உன்னைப் பிரியோம், உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்று அவன் முன்னிலையில் அறிவிப்பது திருப்பாவையின் உட்பொருளாகும். ஆனது பற்றியே, மற்ற ஆழ்வார்களின் ப்ரபந்தங்களை வேதங்களின் ஸ்தானத்திலும், திருப்பாவையை எல்லா வேதங்களுடையவும் ஸார தமமான அர்த்தத்தைத் தெரிவிக்கும் உபநிஷத்துடைய ஸ்தானத்திலும் வைத்து நம் பூர்வர்கள் அனுபவித்திருக்கிறார்கள்.

இவ்விதமாக பகவத்கீதைக்கும் பக்த கீதையாகிய திருப்பாவைக்கும் பொருள், விஷயம், அனுபவம் எல்லாம் ஒத்திருப்பதை நாம் அறியலாம். ஒத்திருப்பது மாத்திரம் அல்ல; இரண்டிலும் சீரியது திருப்பாவையே என்றும் நிஷ்கர்ஷிக்கலாம்.

( நன்றி பக்தன் : 1963 )





# வடதிருமுல்லை வாயில்



''சொல்(ல)அரும் புகழான் தொண்டை மான்
களிற்றைச் சூழ்கொடி முல்லையால் கட்டிட்டு
எல்லையில் இன்பம் அவன்பெற
வெளிப்பட்டு அருளிய இறைவனே என்றும்
நல்லவர்பரவும் திருமுல்லை வாயில்
நாதனே நரைவிடை ஏறீ!
பல்கலைப் பொருளே படுதுயர்
களையாய் பாசுபதா பரம்சுடரே!

என்றதேவாரம்சுந்தரமூர்த்தி சுவாமிகள் வடதிருமுல்லை வாயில் இறைவனைக் குறித்துப் பாடியதைக் காட்டுகின்றது.

இத்தலம் சென்னைக்கருகில் உள்ள அம்பத்தூரிலிருந்து வட மேற்கில் சுமார் இரண்டு மைல் தூரத்திலிருக்கிறது. தொண்டை நாட்டில் உள்ள முப்பத்திரண்டு சிவத்தலங்களில் இது ஒன்றாகும். முன் காலத்தில் இவ்விடத்தில் முல்லை மலர்த்தோட்டங்கள் மிகுதியாக இருந்தனவாம். அதனால்தான் இவ்விடத்துக்கு திருமுல்லை வாயில் என்ற பெயர் வரலாயிற்று. சோழ நாட்டில் சீர்காழிக்கருகில் மற்றொரு திருமுல்லை வாயில் என்ற தலம் இருப்பதால் இத்தலத்துக்கு வட திருமுல்லை வாயில் என்ற பெயர் வழங்கி வருகிறது.

இது ஒரு புராதன க்ஷேத்திரம் என்றும் ஒவ்வொரு யுகத்திலும் ஒரு பெயர் கொண்டது என்றும் இவ்வூர்த் தல புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது. கிருதாயுகத்தில் இரத்தின புரம்என்றும், திரேதாயுகத்தில் பில்வாரண்யம் என்றும், துவாபரயுகத்தில் சண்பகாரண்யம் என்றும் இக்கலியுகத்தில் மாலதிவனம் என்றும் பெயர்கள் வழங்கப் பட்டதாகத் தெரிகிறது.

இத்தலத்தைப்பற்றி ஒரு கர்ண பரம்பரைக் கதையும் கூறப்படுகிறது. முன்னர் தொண்டை மண்டலத்தை ஆண்டு வந்த தொண்டைமான் சக்கரவர்த்திதான் இத்தலத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ மாசிலாமணி ஈஸ்வரருக்கும் கொடியிடை அம்மைக்கும் ஆலயம் கட்டினதாகக் கூறுகிறார்கள். அவன் ஆட்சிக் காலத்தில் கடம்பர், குறும்பர் என்ற மரபினர் திருமுல்லை வாயிலுக்கருகில் ஒரு சிற்றூரை ஆண்டு வந்தனர் என்றும் அவர்கள் மக்களுக்குத் தொல்லை கொடுத்துக் கொடுமைப் படுத்தினர் என்றும் கூறப்படுகிறது. தொண்டைமான் சக்கரவர்த்தி அவர்களைப் போருக்கழைத்துவிட்டு வெற்றி பெற முடியாமல் திரும்பி வந்தார். அப்படி வரும்போது அவர் ஏறி வந்த யானையின் கால்கள் திருமுல்லை வாயிலுக்கருகில் முல்லை மலர்க்கொடிகளில் சிக்கிக்கொண்டு நகராமல் நின்றுவிட்டன. உடனே மன்னன் யானை மீதிருந்தபடியே அதன் கால்களைச் சுற்றிக் கொண்டிருந்த கொடிகளைத் தமது வாளால் வெட்டி அறுத்துவிட முயன்றார். அப்போது அவர் வாளிலிருந்து ரத்தம் கசிய ஆரம்பித்தது. அதன் காரணத்தையறிய மன்னன் கீழே இறங்கி வந்து அந்தக் கொடிகளை விலக்கிவிட்டுப் பார்க்கையில் அங்கே ஒரு சிவலிங்கம் இருந்தது. அதன்மேல் தான் மன்னன் வாள்பட்டு ரத்தம் வந்து கொண்டிருந்தது. பரம பக்தனான தொண்டைமான் சக்கரவர்த்தி தான் அறியாமலே சிவபெருமானுக்கு ஒரு அபசாரம் செய்துவிட்டதைப்பற்றி வருந்தி இறைவனை மன்றாடித் துதி செய்தார். அப்போது அசரீரியாக ஒரு குரல் "மன்னவா, பயப்படாதே! உனது வாள் என்னை ஒன்றும் செய்துவிட முடியாது. நான் மாசிலாமணியாயிற்றே! மற்றும் உன் எதிரிகளை யொழிக்க நம் நந்தியும் அவர் கணங்களும் வந்து உனக்கு உதவி புரிவார்கள். நீ மறுபடியும் அவர்களுடன் சென்று உன் எதிரிகளை வென்று வா'' என்று கூறிற்று.

மன மகிழ்ந்த மன்னன் அவ்விதமே நந்தி பகவானுடைய உதவியால் கடம்பர், குறும்பர் முதலியோரைப் போரில் வென்று அவர்களிடமிருந்த எருக்கந் தூண்களைக்கைப்பற்றி வந்தார். திருமுல்லை வாயிலில் மாசிலாமணி ஈஸ்வரருக்கும் கொடியிடை அம்மைக்கும் அழகான தொரு ஆலயம் அமைத்து தான் கொணர்ந்த எருக்கந்தூண்களையும் இறைவன் சன்னிதி முன்பு நட்டு விட்டார். இன்றும் இந்தத் தூண்களை பக்தர்கள் வலம் வந்து சேவிக்கிறார்கள்.

திரு. டி. சீனிவாசன்,
சென்னை-35.

தொண்டைமான் சக்கரவர்த்தி யானைமீது அமர்ந்து முல்லைக் கொடியை வெட்டும் காட்சி வெளி மண்டபத்தூண் ஒன்றில் செதுக்கப் பட்டிருக்கிறது. சமீபகாலத்தில் இதே காட்சியை கோபுரத்தில் நுழைந்தவுடன் தெரியும்படி பதுமைகள் அமைத்திருக்கிறார்கள். வட திருமுல்லை வாயில் கோவிலில் சில

அபூர்வகாட்சிகளைக்காணலாம். நந்தி பகவான் இறைவன் சன்னிதானத்தைப் பார்த்துக் கொண்டு இராமல் எதிர்ப்புறமாக வீற்றிருப்பது தொண்டைமான் சக்கரவர்த்திக்கு உதவி புரிந்த நிகழ்ச்சியைத் தெரிவிக்கும் வகையில் அமைந்திருக்கிறது.

உத்ஸவமூர்த்தி ரிஷப வாகனத்தில் அமர்ந்திராமல் தனியாகவே நிற்கிறார். அம்மன் மற்றக் கோவில்களில் இடது புறம் இருப்பது போல் அல்லாது வலது பக்கத்தில் நிற்கிறார். அதற்குக் காரணம் இறைவன் தொண்டைமான் சக்கரவர்த்தி தான் செய்த தவறுக்காகத் தன்னையே மாய்த்துக் கொள்வாரோ என்று அஞ்சி அவருக்குக் காட்சியளிப்பதற்காக விரைந்ததாகவும் அந்த அவசரக் கோலத்தில்தான் இந்த மாதிரி அமைந்துவிட்டதாகவும் கூறுகிறார்கள்.

இக்கோயிலில் சிவலிங்கத்துக்கு அபிஷேகம் செய்வதில்லை. ஆவுடையாருக்கு மட்டுமே செய்கிறார்கள். மன்னன் வாளினால் காயமுற்ற லிங்கத்துக்கு சந்தனப் பூச்சு அமைத்திருக்கிறார்கள். ஆகையால்தான் அதற்கு அபிஷேகம் கிடையாது. வருடம் ஒரு முறை புதிதாக சந்தனக் காப்பு அமைக்கிறார்கள்.

பஞ்சமுக விநாயகர் (அதாவது ஐந்து முகங்களுடைய விநாயகர் சிலை) கோபுரத்தில் செதுக்கப்பட்டிருக்கிறது. இது ஒரு தனிச் சிறப்பாகும்.

"கஜப் பிரஷ்ட விமானம்" இறைவன் கருவறைக்குமேல் அமைக்கப் பட்டிருக்கிறது. யானை படுத்திருக்கும் உருவத்தில் இந்த விமானம் உள்ளது. பிரம்ம தீர்த்தம்; சுப்ரமணிய தீர்த்தம் என்னும் குளங்கள் உள்ளன.

மாசிலாமணி ஈசுவரர் கோவிலின் முன்பு அனேக கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அதில் கி. பி. 975-985-ல் ஆண்டு வந்த புகழ் பெற்ற உத்தமச் சோழ அரசனின் கல்வெட்டுகள்தாம் மிகப்பழமை வாய்ந்தவை.

மற்றும் ஒரு கல்வெட்டிலிருந்து, மண்டபம், முதலாவது இராஜேந்திர சோழனால் கட்டப் பட்டது என்று தெரிகிறது. சோழர் பரம்பரையில் வந்த குலோத்துங்கன், விஜயநகரத்துப் புக்கராயர், ஜடாவர்ம சுந்தர பாண்டியன்ஆகிய இவர்களது பெயர்களும் செதுக்கப்பட்டுள்ளன. ஹைதர் அலி சென்னையின் மேல் படையெடுத்த போது இக்கோயில் சேதமடைந்தது. ஆனால் கி. பி. 1805 ஆம் ஆண்டு மாசிலாமணி முலியார் அவர்களின் முயற்சியால் ஓர் அளவு பழைய நிலைக்குக் கொண்டு வரப் பட்டது. அவருடைய உறவினர் நைசாம் முனியப்ப முதலியார் இப்போது உள்ள ராஜகோபுரத்தைக் கட்டினார்.

இத்தலத்தில் வீற்றிருக்கும் இறைவனைப்பற்றிப் பாடிய சுந்தரமூர்த்தி நாயனார் திருப்பதிகம் மனத்தை உருக்கும்படி அமைந்திருப்பதால் பக்தர்கள் அதைப்பாடிப் பரவசம் அடைகிறார்கள். மற்றும் அருணகிரிநாதர், இராமலிங்கசுவாமிகளும் இத்தலத்தைப்பற்றிப் பாடியுள்ளார்கள்.

இவ்வளவு மகிமை வாய்ந்த தலத்தைத்தரிசிப் பவர்களுக்கு மாசிலாமணி ஈசுவரர் கொடியிடையம்மை தரிசனம் கிட்டுவதோடு, ஒரு பழம் பெரும் பதியைத்தரிசித்தோம் என்ற மனநிறைவும் ஏற்படுவது திண்ணம்.

❦

## ஸ்ரீ பத்மாவதி அம்மையார் கோயில், திருச்சானூர்.

### வெள்ளிக்கிழமை நிகழ்ச்சி நிரல்

**காலை**

| | | | | |
|---|---|---|---|---|
| சுப்ரபாதம் | 4-00 | முதல் | 4-30 | வரை |
| ஸகஸ்ரநாம அர்ச்சனை | 4-30 | ,, | 5-00 | ,, |
| முதல் மணி | 5-00 | ,, | 5-30 | ,, |
| ஸர்வதரிசனம் | 5-30 | ,, | 7-00 | ,, |
| அபிஷேகம் | 7-00 | ,, | 9-00 | ,, |
| அஷ்டோத்ரநாம அர்ச்சனை | 9-00 | ,, | 11-00 | ,, |
| ஸர்வதரிசனம் | 11-00 | ,, | 1-00 | மதியம் |

**மாலை**

| | | | | |
|---|---|---|---|---|
| 2-வது மணி | 1-00 | ,, | 1-30 | ,, |
| ஸர்வதரிசனம் | 1-30 | ,, | 4-00 | ,, |
| அஷ்டோத்ரநாம அர்ச்சனை | 4-00 | ,, | 6-00 | ,, |
| ஸர்வதரிசனம் | 6-00 | ,, | 7-00 | ,, |
| இரவு மணி | 7-00 | ,, | 7-30 | ,, |
| ஸர்வதரிசனம் | 7-30 | ,, | 8-45 | ,, |
| ஏகாந்தசேவை | 8-45 | ,, | 9-00 | இரவு |

தொடர் கட்டுரை

# திருமாலின் திரு அவதாரங்கள்

முன்பொரு சமயம் என் தந்தை மேருமலைக்குத் தவம் செய்யச் சென்றிருந்தார் அல்லவா? அப்போது, என் தந்தைக்கு எதிரிகளாகிய தேவர்கள் எங்கள் குலத்தவரான அரக்கர்களையெல்லாம் போர்க்களத்தில் கொன்றொழித்தனர். தேவேந்திரன் என் தாயைச் சிறை செய்தான். என் தாயைச் சிறையிலிருந்து விடுவிக்குமாறு நாரத முனிவர் தேவேந்திரனைக் கேட்டுக் கொண்டார். ஆனால், இந்திரனோ என் தாயின் வயிற்றில் பிறக்கும் குழந்தையைக் கொன்ற பிறகே சிறையிலிருந்து என் தாயை விடுவிக்கப் போவதாக உறுதியாகக் கூறி விட்டான்.

இறுதியாக, இந்திரன் கூறியதைக் கேட்ட நாரதன், "இரணியன் மனைவியின் வயிற்றில் பிறக்கும் குழந்தை கொல்லுதற்குரியதன்று. அக்குழந்தை தெய்வக் குழந்தை, மாயவன் மனத்துக்குவப்பான குழந்தை. எனவே, தேவேந்திரா! இவ்வன்னையாரை வேறு ஒரு நல்ல சிறைக்கு மாற்றி அனுப்பு!" எனக் கூறினார் நாரதர். என் தாயும் சிறை மாறினாள். மனம் வருந்தி நிற்கும் என் தாய்க்கு ஆறுதல் கூறுவதைப் போல, அற நூல்களையெல்லாம் நாரதமுனிவர் என் தாயின் திருச் செவிகளில் ஓதினார். என் தாயின் கருவிலிருந்த நான் அந்த அற நூற் கருத்துக்களையெல்லாம் குற்றமில்லாமல் கற்றுக் கொண்டேன். கருவிலே திருவுடையவனாக நான் விளங்கியிருந்ததை யாரும் அறிய மாட்டார்கள். நான் கற்றறிந்ததை உங்களுக்கும் கூறுகிறேன். கேளுங்கள்!" என்று ஆசிரியர்களுக்கே நல்லுரை நவில ஆரம்பித்தான் பிரகலாதன்!

நாரதமுனிவன் கூறக்கேட்டவற்றைப் பிரகலாதன் சுக்கிரன் புதல்வர்க்கு எடுத்துக் கூறினான்; "அன்புக்குரிய ஆசிரியர்களே! திருமாலின் திருவடியை நினைக்கும் எந்த உயிரும் உயர் பதவியை யடையும். திருமாலை எண்ணாதஉயிர்பிறப்புடையதாயினும் நரகத்தையே யடையும். எனவே, அரிதாகிய மானிடப் பிறவியை யடைந்தவர் வாளா காலத்தைப் போக்கக் கூடாது. கனவிலுங்கூடக் கடவுளைக் கருதாதவர் பிறவிக் கடலுள் அழுந்தித்துன்புறுவர். எழுவகை யோனியுள்ளும் பிறந்து பிறந்து முடிவில் வீணே இறந்து போவர். கூற்றுவனுக்கே இரையாவதற்குப் பிறவியெடுக்கும் அவர் மடமையை எவ்வாறு இயம்புவது? பொன்னாசையும், பெண்ணாசையும், மண்ணாசையும் கொண்டு புத்தி மயங்கும் புல்லர்கள் ஒரு போதும் கடைத்தேறார். ஆசை கொண்டு அலைபவர் விகார மடைவர், வீடு பேறடைதல் இயலாது. விகாரமில்லாதவர் விஷ்ணு ஒருவரே!

மறைந்திருத்தல், வெளி வருதல், ஓங்கி வளர்தல், வளர்ச்சியின் முடிவையடைதல், தேய ஆரம்பித்தல், முற்றிலும் தேய்ந்து போதல் ஆகிய ஆறு விகாரங்களும் அற்றவர் அரி ஒருவரே! அரியை அறிந்தவரே அறிவினையுடையவர். அரியை அறியாத மற்றவர் அனைவரும் மூடரே! காமத்தைப் பொருளென்று கருதிக் கருத்தழிபவர்கள் கானலை நீரென்று எண்ணும் கயவருக்கு ஒப்பாவர். காமத்தை வென்றவரே கடவுளைக் காண முடியும். நம்மால் காணப்படும் அனைத்துமே அழியக் கூடியவை. அழிவில்லாதவன் ஆண்டவன் ஒருவனே! ஆண்டவன் இருப்பதை அறிந்து உணர்வதே அறிவு எனப்படும். அவன் இல்லையென்று கூறுவது அறியாமை!

சத்துவம், ராஜஸம், தாமசம் ஆகிய முக்குணங்களும், சாக்கிரம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவத்தைகளும் நீங்கப் பெற்றவரே அறிஞராவர். இத்தகைய அறிஞரே அழிவில்லாத பரம்பொருளை நாடியுணரும் நல்லறிஞர் எனப்புகழப் பெறுவர். கனவு வருவதற்குத் தூக்கம் காரணமாதலைப் போல,

**திரு. மா. சீதாராமன், M.A.B.Ed.,**
பெருங்காட்டூர்.

பிறவி வருவதற்கு வினையே காரணமாகிறது. இவ்வுடல் நாம் செய்த முன்வினையால் வந்தது. வினைக்கு வினையாகத் தோன்றுவது. வினைப்பயனது விளைவு நீங்க வேண்டுமானால், திருமாலின் திருவடியை மனத்தினால் சிந்தித்து வாயினால் பாட வேண்டும். வஞ்சக மனத்தால் வரும் சஞ்சலத்தைப் போக்க வேண்டுமானால், குருவைத் துணையாகக் கொள்ள வேண்டும். குருவை மருவி நிற்பார்க்குக் குறையொன்றும் வாராது. குருவைச் சார்ந்து நிற்பவரது மனம் திருமால் திருவடிகளைத் தொழுவதற்குத் திரும்பும். எனவே, ஆசாரியன் திருவடியைப் பற்றுவோரின் தீவினை தானே அகலும். காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களும் அவர் காலடியினையும் அணுகாது. எனவே, ஆசானை அடைந்தவர் உள்ளம் ஆனந்த வெள்ளத்தில் மிதக்கும். எத்தவத்தைச் செய்தாலும், ஏதவத்தைப் பட்டாலும் நித்தமும் சித்தத்தைத் திருமாலிடமே வைத்தல் வேண்டும். நாம் செய்யும் வினையின் பயன்கள் அனைத்தும் ஆண்டவனுக்கே உரியவை என எண்ணினால், வினையின் பயன் நம்மை ஒன்றும் செய்யாது, தேவர், மனிதர், அரக்கர், பறவை, விலங்கு எனப்படும் எவ்வகையுயிரும் திருமாலுக்

கன்பு செய்தால் வீடு பேறடைதல் திண்ணம். எனவே, ஆசிரியப் பெரு மக்களே! நீங்களும் திருமாலுக்கு அடிமை செய்யுங்கள். அவனிடம் அன்பு செலுத்துங்கள். உங்களிடம் அன்பு ஒன்றையே இறைவன் எதிர் பார்க்கிறான். அன்பு செய்வோர்க்கே அவன் அருள்புரிகிறான். எனவே, நீங்களும் நலம் பெற நாராயணனின் நாமத்தை நவிலுங்கள். என் தாயின் செவி வழியாக நாரத முனிவர் எனக்குக் கூறிய நல்லுரைகளையே நான் உங்களுக்கு இதுவரை எடுத்துக் கூறினேன். நான் பெற்ற இன்பத்தை இவ்வையகமும் பெற வேண்டும் என்றுகருதியே உங்களுக்கு இவற்றை யெல்லாம் விளக்கமாகக் கூறினேன். எனவே, இனியாவது 'ஓம் நமோ நாராயணா!' என்று ஓதுங்கள். 'இரணியாய நம!' என்று கூறுவதை விட்டு ஒழியுங்கள். இதுவே உய்யும் வழி!'' என்று பிரகலாதன் சுக்கிரன் மைந்தர்கட்குப் பக்குவமாகத் தத்துவக் கருத்துக்களை எடுத்துக் கூறினான்.

பிரகலாதன் கூறிய இவற்றையெல்லாம் கேட்டுச் சுக்கிரன் புதல்வர்கள் பிரமித்து நின்றனர். பிரகலாதனைத் தங்கள் வழிக்குக் கொண்டு வருதல் முடியாத செயல் என்று முடிவாகக் கருதினர். எனவே, இவற்றையெல்லாம் இரணியனிடம் கூறிவிடுதலே தங்களுக்குத் தப்பிக்கும் வழியென்று கருதி, இரணியன் இருப்பிடம் நோக்கிச் சென்றனர்.

திருமாலின் பெருமைகளையும், அன்பு அறிவு ஆகியவற்றின் விளக்கங்களையும் பிரகலாதன் கூறக்கேட்ட சுக்கிரன் மைந்தர்கள் இரணியனிருப்பிடம் சார்ந்தனர்; தாங்கள் கேட்ட அமுதம் போன்ற சொற்களை எடுத்துக் கூறினர். இவற்றைக் கேட்டவுடனே இரணியனின் கண்கள் கனலைக்கக்கின, நஞ்சினை உமிழும் நாகம் போலச் சீறினான் இரணியன்!

அரக்கவீரர்களை நோக்கினான் இரணியன். ''நீங்கள்உடனே சென்று அவனை இங்கே கொண்டு வருக!'' என்று ஆணையிட்டான். அரக்கர்கள் விரைந்து சென்று பிரகலாதனைக் கொண்டு வந்து நிறுத்தினர். மகனைக் கண்டதும் இரணியன் மாறாக் கோபம் கொண்டான். ''தீயவனே! உனக்கு மரணம் நெருங்கி விட்டது!'' எனச் சீறிச் சினந்தான்.

இரணியன் : அற்பப் பயலே! நீயா எனக்கு அறிவுரைகூறுகிறாய்? அரி! அரி! என்று அலறுகிறாயே! அந்த அரி எங்கேயடா இருக்கிறான்?

பிரகலாதன் , அப்பா ? அரி எங்கே? அரி எங்கே? என்று திருப்பித் திருப்பிக்கேட்கிறாயே! அரிஎங்கும் இருக்கிறான். விறகில் நெருப்பைப் போலவும், பாலில் நெய்யைப் போலவும்,எள்ளில் எண்ணெயைப் போலவும், மலரில் மணத்தைப் போலவும் அவன் மறைந்தே காணப்படுவான்! அன்பும், அறிவும் இருந்தால் அவனைக் காண லாம். அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த வடிவுடன் அருள்புரிந்து வருகிறான். அவன் இல்லாத இடம் என்பதே இல்லை.

இரணியன் : அப்படியா! அவன் எல்லாப் பொருள்களிலும் மறைந்திருக்கிறான் என்கிறாயே! மூடனே! இதோ என் எதிரில் காணும் தூணிலும் அந்தத் திருடனாகிய திருமால் ஒளிந்து கொண்டிருப்பானா?

பிரகலாதன் : இந்தத் தூணிலும் இருப்பானா திருமால் என்கிறாய்? இந்தத் தூணில் மட்டுமல்ல, நீ கேட்கும் அந்தக் கேள்வியிலும் கூட அவன் ஒளிந்திருக்கிறான். இந்த உண்மையை நீ விரைவில் காணத்தான் போகிறாய்!

இரணியன் : அரி இருக்கிறான் என்பது உனக்கும் அமரர்க்குமே பொருந்தும் உண்மை. நீ கூறும் அந்த அரியை இந்தக் கம்பத்திலே காட்ட வேண்டும். இல்லையேல், மதயானையைக் கொன்று குருதியைக் தேக்கும் சிங்கத்தைப்போல உன்னையும் கொன்று உன் உடலையும் தின்பேன். இது உறுதி! (எதிரில் இருக்கும் தூணைத் தன் கையால் ஓங்கித் தாக்கினான்)

இரணியன் தூணைத் தாக்கியவுடனே பெருஞ் சிரிப்பொலி எழுந்தது. அந்தப் பேரொலி வானையும், எட்டுத் திசைகளையும் பிளந்தது. பெருஞ்சிரிப்பொலி கேட்டுப் பிரகலாதன் பெரிதும் மகிழ்ந்தான். நான்முகனும் காணாத நாரணனின் நகையொலியைக் கேட்ட பிரகலாதன் ஆனந்தத்தால் ஆடினான்; பாடினான்: அழுதான்; தொழுதான். தாமரை மலர்போன்ற தன் கைகளைத் தலை மேல் கூப்பி வணங்கி நின்றான்.

''யாரடா சிரித்தவன்? நீதான் அந்த அரியென்பவனோ? பாற்கடலில் அல்லவோ நீ ஒளிந்து கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள்! அந்தக்கடல் போதாதென்று இந்தக் கம்பத்திலும் வந்து ஒளிந்துகொண்டாயா? உனக்கு வீரமிருந்தால் கம்பத்தை விட்டு வெளியே வா! என்னுடன் நேருக்கு நேராக நின்று போர்செய், புறப்படு வெளியே!'' என்று இடி போன்று முழங்கினான் இரணியன்.

'புறப்படு' என்று இரணியன் கூறியவுடனே தூண் இரண்டாகப் பிளந்தது. அந்தத் தூணிலிருந்தும் சிங்கமுகத்தோடு கூடிய அரி வெளிப்பட்டார்.

வெளிப்பட்ட நரசிங்க வடிவம் எட்டுத்திசைகளையும் தாண்டி வளர்ந்தது. அகில உலகங்களையும் அவன் திருப்பாதங்கள் அளந்தன. அப் பெருவடிவத்தின் பெருமையை யாரே பேசுதற்கு இயலுவார். நரசிங்கப் பெருமானின் விசுவரூபத்தை முழுவதுமாகக் கண்டவர் ஒருவருமிலர். அரியின் பெருவடிவத்துக்கு இந்த உலகம் ஒரு தூசியைப் போன்று காட்சியளித்தது. கடல் ஒரு துளியைப்போலக் காணப்பட்டது, சிவந்த அக்கினி ஒரு சிறு பொறி போலத் தோற்றம் அளித்தது. பெருங்காற்றானது நரசிங்கப் பெருமானின் சிறுமூச்சுப்போல விளக்கம் தந்தது. தூய்மையான ஆகாயம் அப்பெருமானின் விரல்களுக்கிடையில் காணப்படும் இடைவெளிக்குச் சமமாக இருந்தது. நரசிங்கப் பெருமானின் வடிவத்துக்கு முன்னர் ஐம்பூதங்களும் அணுக்களைப் போன்று மிகவும் சிறியனவாகவே காணப்பட்டனவாம்!

(தொடரும்)



# பாவை பாடிய முல்லை



தமிழில் பாபாடிய பாவையர் பலர் பரந்து உள்ளனர். அவ்வையார், வெள்ளி வீதியார், காரைக்கால் அம்மையார் எனப் பலர் ஆவர். பாவைபாடிய சான்றோர் சிலர். அவர்களுள் திருப்பாவை அருளிய சூடிக் கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாள் அம்மையாரும், திருவெம்பாவை வழங்கிய மணிவாசகப் பெருந்தகையாரும் சிறந்தோர் ஆவர். அந்த இரு சான்றோர்களிலுங்கூட "**பாவை பாடிய பாவை**" என்ற பட்டத்திற்கு உரிய தனிச்சிறப்பு ஆண்டாள் நாச்சியாருக்கே உரியது.

வைணவ மந்திரங்களில் முதன்மையாக விளங்கும் திருமந்திரத்தின் நடுவில் திகழும் நம: பதம் போலத் தமிழ் அகப்பொருள் வாழ்வில் தலையாய இடம் பெற்று விளங்கும் திணை முல்லைத் திணை ஆகும். 'கொண்டானை அன்றிப் பிறனென்னுக் கோமகள்' நெஞ்சநிலை அது. 'மாற்று உள்ள வாழ்க்கை' அது. ''பிரிவினும் சுடுமோ பெருங்காடு' என்று ஆண்டவனுக்கு அடிமை பூண்டு வாழ்வதில் இன்பங் காண்பது அது. சுருங்கக் கூறின் அது மனைத் தவம்; மங்கையர் மனத்தவம்.

அகவாழ்வில் அமைந்து சிறந்த அந்த முல்லை மாண்பு ஆன்மீய வாழ்வுக்கும் குறியீடு ஆவதுபோல் அமைந்து பொலியும் திருப்பாவை மாட்சியை விளக்குவதே இந்தக் கட்டுரை.

குறிஞ்சி, முல்லை முதலிய அகத்திணை ஒவ்வொன்றினையும் முதல், கரு, உரி என்னும் மூன்று கோணங்களில் கண்டனர் பண்டைத் தமிழ்ச் சான்றோர். அவற்றுள் முதற்பொருள் என்பது பிரபஞ்சத் தோற்றத்திற்கு அடிப்படையான காலம் இடம் என்னும் இரண்டுமாம்.

காலம் பெரும் பொழுது, சிறு பொழுது என மேலும் இருவகைப் படும். ஆண்டின் ஆறு கூறுகளில் ஒன்றுகிய கார்காலம் முல்லைப்பெரும் பொழுது ஆகும்; மாலைக் காலம் அதன் சிறு பொழுதாகும். 'கார் மேனிச் செங்கண் கண்ணனின் தோற்றத்தைக் காட்டி அவன் காட்சியில் உலகமும் உள்ளமும் குளிர்வதைக் காட்டி ஒரு கார்காலச் சூழலை உருவாக்கித் தருகிருர் ஆண்டாள். ஆழியுள் புக்கு, முகந்து, ஆர்த்து, ஏறி, மெய் கறுத்து, மின்னி அதிர்ந்து வாழப் பெய்யும் கார்கால மழை நம் கண்ணுக்கும், காதுக்கும், உடலுக்கும் விளங்குமாறு அவர் காட்டுவதும் இங்கு மேலும் கருதத் தக்கது.

முல்லைக்கு உரிய சிறுபொழுது மாலை எனக் கண்டோம். மாலை என்பது பகல் மறைந்து இருள்சூழும் நேரம் என்பதை அறிவோம். அதாவது பகலுமின்றி இரவுமின்றி மயங்கிய ஒரு பொழுது அது. அப்படியே அஞ்ஞான இருளில் முழுதும் ஆழ்ந்து கிடக்காமலும் மெய்ஞானத் தெளிவில் நன்கு தெளிந்து திகழாமலும் வாழ்கின்ற இந்த மானுட மனநிலையாகிய மாலை (மயக்கம்) பத்து வகையாகப் பாவையில் சுட்டிக் காட்டப் பட்டுள்ளது. கண்ணனைக் கருதாத மயக்கம், அவள் புகழைக் கேளாத மயக்கம், கேட்டும் கேளாதவர்போல் கிடக்கும் மயக்கம், தேவாதி தேவனை சென்று சேவியா மயக்கம், தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய பஞ்சணை இன்பத்தில் மனம் வைத்த மயக்கம், கற்றுக் கறவை பல கறக்கும் செல்வச் செருக்காகிய மயக்கம், நற்செல்வன் உறவு என்னும் குடிப்பெருமையாம் மமகார மயக்கம் என்னும் பலவகை மயக்கங்கள் (மால் நிலைகள்) பாவையில் குறிக்கப் பெற்றுள்ளன.

இவ்வாறு முல்லைத் திணை முதற் பொருளில் காலம் என்னும் கருத்து, குறியீட்டு (Symbolic) நிலையில் அமைய, இடம் என்னும் பொருள் வெளிப்படையாக விளங்கக் காணலாம். முல்லைத் திணைக்கு உரியநிலம் காடும் காடுசார்ந்த பகுதியுமாகும். அதன் கண் விளங்கும் ஊர்கள் பாடி, சேவி என வழங்கப்பெறும். 'கறவைகள் பின் சென்று கானஞ் சேர்ந்துண் போம்' என்று ஆண்டாள் குறுப்பிடும் கானம் (காடு) அவர்கள் வாழ்கின்ற ஊருக்கு அருகில் காடு இருந்தது என்பதைத் தெளிவாகக் காட்டும். அன்றியும் பாவைக் களமாக அமைந்தது ஆய்ப்பாடியே ஆகும். இவ்வாறு முல்லைத்திணைக்கு உரிய பேரிடமும், சிற்றிடமும் தெளிவாகப் பாவையில் இடம் பெற்றுள்ளன.

---

*டாக்டர். பொன். சௌரிராஜன்,*
*திருப்பதி.*

---

அடுத்துக் கருப்பொருள் பற்றி அகப்பொருள் பேசும். பொதுவாக எல்லா நிலங்களுக்கும். உரிய கருப் பொருள் சில என்று தொல்காப்பியர் சிலவற்றை எடுத்துக்கூறிக் கருப் பொருளை வரையறை செய்துள்ளார்.

> ''தெய்வம் உணவே மாமரம் புட்பறை
> செய்தி யாழின் பகுதியொடுதொகைஇ
> அவ்வகை பிறவும் கருவென
> மொழிப''
>
> *(தொல். பொருள். 18)*

தெய்வம், உணவுப் பொருள், விலங்கு, பறவை, மரம், பறை, தொழில், யாழ் முதலியனவும் அவை போன்ற வேறு பிறவும் கருப்பொரு

ளுக்கு உரியனவாகும் என்பது அவர் எண்ணம்.

முல்லைத் திணை தெய்வம் திருமால். ஆண்டாள் பாவையின் பாடுபொருள் கண்ணனே. கண்ணனே நெறியும் குறியும். எனவே முல்லைத் திணைத் தெய்வமான மாயோனே இங்குத் திருப்பாவை அடிதொட்டு முடிவரை இடங்கொண்டு விளங்குகிறான் என லாம்.

மேலும் அன்று ஆயர்பாடியில் கண்ணன் செய்த பிள்ளைத் திருவிளையாடல்கள் எல்லாம் பாவையில் இடம் பெற்று விளங்குகின்றன. சகடாசுரனை அழித்தது, கன்றை குணிலா எறிந்தது, கோவர்த்தன கிரியைக் குடையாய்ப் பிடித்தது எல்லாம் திருப்பாவை குறிப்பிடு கிறது.

''பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி
கன்று குணிலா எறிந்தாய் கழல் போற்றி
குன்று குடையா எடுத்தாய் குணம் போற்றி''

என்ற தொடர்கள் முல்லைநிலத் தெய்வமாகிய கண்ணனின் புகழை யும், கழலையும், குணத்தையும் போற்றுவனவாகும்.

முல்லை நில மக்கள் ஆயர்கள், ஆய்ச்சியர் ஆவர். இதனை 'அறி வொன்றும் இல்லாத ஆய்க்குலம்', ''வாச நறுங்குழல் ஆய்ச்சியர்'', 'ஆயர் சிறுமியர்' என்ற தொடர் களால் குறிப்பிடுகிறது பாவை.

முல்லைநில மக்கள் கால்நடைகளை மேய்ப்பர்; பால் கறப்பர்; தயிர் கடைவர்; வெண்ணெய், பால், மோர் விற்பர்.

''பெற்றம் மேய்த்துண்ணும் குலம்''
''கறவைகள் பின்சென்று கானஞ் சேர்ந்துண்போம்''

என்ற தொடர்களின் மூலம் ஆநிரை களை மேய்க்கும் தொழில் குறிக்கப் பெற்றது.

'கற்றுக் கறவைக் கணங்கள் பல கறந்து'
'ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப'
'மாற்றாதே பால் சொரியும்......,
'வாங்கக் குடம் நிறைக்கும்......,

ஆகிய அடிகளால் பால் கறக்கும் தொழில் விளக்கம் பெறல் அறிய லாம். இவை கண்ணுக்குத் தெரியும் புறத் தொழில்கள்.

வீட்டின் உள்ளே ஆய்ச்சியர் தயிர் கடைவதை உள்சென்று காண்பது அரிது. எனவே ஓசையின் மூலம் ஆண்டாள் அந்த அகத்தொழிலை நமக்கு உணர்த்துகிறார்.

''காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்
ஓசை படுத்த தயிரரவம்......''

என்பதே அது.

இவ்வாறு முல்லையின் முதல், கருப்பொருள்கள் திருப்பாவையில் அமைந்து விளங்குவது போல உரிப் பொருளும் நுட்பாக இடம் பெற் றிருப்பதனை ஊன்றி நோக்குவோர் அறிவர்.

முல்லைத் திணையின் உரிப்பொருள் இல்வாழ்வில் கடமைகளைச் செய்வ தாகும். சிறப்பாக ஆற்றியிருப்ப தாகும். அதாவது பிரிந்த தலைவனை நோக்கி அவன் கூட்டத்துக்கு ஏங்கி உணவு கொள்ளாது, கண்துயிலாது அவனையே நினைந்து இருத்தல் முல்லை திணையின் உரிப்பொருளாகும்.

'விருந்துவரின் உவக்கும் முல்லை சான்ற கற்பு'' என்று சங்கத் தமிழ் பாடும். செல்விருந்து ஓம்பி வரு விருந்து பார்த்திருக்கும் அந்தமுல்லை நிலப்பெரு வாழ்வை 'ஐயமும் பிச் சையும் ஆந்துணையும் கைகாட்டி' என்ற சொற்களில் அழகாக ஆண் டாள் அமைத்துக் காட்டுகின்றாள்.

இங்குத் திருப்பாவையிலும் தலைவ னாகிய கண்ணனைப் பிரிந்த நிலையில் உயிர் நெய்யுண்ணாது, பால் உண் ணாது, மையிட்டுக் கொள்ளாது இன்பந் துறந்து, அவன் அன்பை, அருளை, ஆடலை, பாடலை, அழகை, ஆற்றலை எண்ணி எண்ணி ஏங்கி ஆற்றியிருக்கும் நிலையைக் காண லாம். இரவெல்லாம் உறக்கமின்றி வைகறையில் எழுந்து அவன் புகழ் பாடித்திரிதலைக் காணலாம். ஆனால் பிரிந்த தலைவனாகிய கண்ணனை அடைந்தவுடன் முழங்கை நெய்வார உண்டு கூடிக் குளிர்வதைக் காண லாம். ஒருமுறை இழுந்துபட்ட பிரிவுத் துயரால் இனி எப்போதும் பிரியாமை வேண்டி ஆன்மா ஆண்ட வனை வேண்டும்அரிய தொடர்களே...

இற்றைப் பறைகொள்வான் அன்று காண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்''

என்பன.

பாவை பாடிய முல்லைப் பொருள் இதுவேயாகும்.



## குரு கடாக்ஷம்

நல்ல பேனா. அருமையான தாள். முத்து முத்தா எழுதி யாச்சு. நல்ல கவர்லே போட்டு ஸ்டாம்பும் ஒட்டியாச்சு. அட்ரஸ் மட்டும் எழுதவில்லை! லெட்டர் போய்ச் சேர வேண்டிய இடத்துக்குப் போகுமா? அதுபோலத்தான் என்ன தான் இருந்தாலும் குரு. கடாக்ஷம் இல்லாதவன் கதி! குரு வினுடைய அனுக்ரஹம் கிடைத்தால் கீர்த்தி உண்டாகும். அதுக்கு குரு கடாக்ஷம் பூர்த்தியிருந்தால் தான் முடியும்.

அனுப்பியவர் : திரு. எஸ். வி. வைத்தியநாதன் - சென்னை.

(10-ம் பக்கத் தொடர்ச்சி)
வழிபாட்டைப் பற்றிக் கூறுகின்றன. மயூரரின் 'சூரிய சதகம்' சூரியனின் ஒளி, அவனுடைய குதிரைகள், சாரதிப்பற்றி கூறிவிட்டு கடைசியில் சூரியனை வருணிக்கிறது.

உயிரற்ற கொதிவாயுக் கோளமே சூரியன் என்பது தற்கால பௌதிகம் சொல்கிற பாடம். ஆனால் தியான அனுபவம் வாய்ந்த நம் முன்னோர்கள் சூரியஜோதிக்குப் பின் ஒரு தெய்வம் இருப்பதாக உறுதியாகக் கருதினர். நம்முடைய உலகத்தை சிருஷ்டித்து உயிர்களை ஜீவனுடன் இயக்கி வரும் சூரியன் காட்சிக்கு எட்டாத பரம்பொருள்;நம் கண்ணுக்குத் தெரியும் வண்ணம் கொண்ட பிரத்தியட்ச வடிவம் என்றார்கள். சூரியன் என்பது நமது கண்ணுக்குக் கோசரமாகும் பிரம்மம். முனிவர்கள் எந்த பரம் பொருளுடன் உட்கலப்பதற்காகத் தவமிருந்தனரோ, அந்த பரம்பொருளின் பிரதிநிதியே சூரியன் என்பது நமது முன்னோர் துணிபு. இந்த உலகமும் உயிர் வாழ்க்கை அனைத்தும் சூரியனைச் சார்ந்தவையே.

## கதிரவன்-ஆற்றலின் மூலம்

''கதிரவனே ஆற்றலின் மூலம்'' (The Sun is the ultimate source of energy) என்பது இன்றைய அறிவியல் கூறும் உண்மை.

ஆற்றல் முழுவதும் அணுவில் தேங்கிக் கிடக்கின்றது என்பது நவீன அணுவியல் மெய்ப்பித்த உண்மை. இதைத்தான் பெரியோர்கள் அணுவில் ஆண்டவன் ஆனந்தக்கூத்து ஆடுகின்றான் என்று கூறினார்களோ என்று கூட எண்ணத் தோன்றுகிறது. உலகமே ஆண் வடிவம் என்பதும், ஒரு மனிதனுடைய உயிராற்றல் அவனுடைய தடைபடாத இதயத் துடிப்பில் எவ்வாறு உள்ளதோ, அதைப்போலவே ஆண் வடிவாக உள்ள உலகின் இதயமாகிய சிதம்பரத்தில் எல்லாம் வல்ல இறைவன் ஆனந்தத் தாண்டவம் புரிகின்றான் என்பதும் ஆன்றோர்களின் நம்பிக்கை.

## பொங்கல்தான் காயத்ரீ திருவிழா

தமிழ் நாட்டில் அனைவரும் பகவானைத் தியானித்து வழிபடும் நாட்கள் பொங்கல் வாரம். மக்களும், ஆடும், மாடும், பசுவும், குருவியும் ஒன்றாகி ஆதித்த பகவானுக்கும் பூஜை செலுத்தும் மூன்று நாட்கள் பொங்கல் விழாவாகும். சூரியனிடமிருந்து நாம் அனைத்தையும் பெறுகிறோம். ஜீவராசிகளனைத்தும் மரம், செடி, கொடி எல்லாம் அவனிடமிருந்துதான் உயிருக்கு வேண்டியன வனைத்தையும் பெறுகின்றன. இது சமயக்கொள்கை மட்டிலுமல்ல, பௌதிக விஞ்ஞானத்தின் மூலம் காணும் உண்மையுமாகும்.

சர்வாச்சரிய மயமான ஆகாயத்தைப் போன்ற கோயில் வேறுஇல்லை. அந்தக் கோயிலில் கண்ணைக் கூசும் ஜோதியாய் ஜொலிக்கும் சூரியனைப் போன்ற மூர்த்தி வேறு இல்லை. புலன்களுக்குப் புலனாகாத பரம் பொருளின் வியக்த ரூபம் ஆவான். பீஷ்ம பிதாமகர் சொல்லியிருக்கிறபடி பொங்கல் பண்டிகை ஆதித்தனை தியானிக்கும் காயத்ரீ மந்திர விழாவாகும்.

ஓம் தத் ஸவிதுர் வரேண்யம் பர்கோ
தேவஸ்ய திமஹீ
தியோ யோநக் ப்ரசோதயாத்

என்று ஆதித்தியனுடைய ஜோதியை தியானிக்கிறோம். அது நம் உள்ளங்களில் புகுந்து நற்கருமங்களில் நம்மைத் தூண்டுவதாகுக. இந்த ஆதித்தமூர்த்தி நம்முடைய பக்தியை எதிர்பார்க்கும் வெறும் லிங்கம் மட்டுமல்ல. சக்தி கொண்ட பரம் பொருளின் பிரதிநிதியே ஆகும். உணவு, ஆரோக்கியம், பலம், விவேகம் எல்லாவற்றுக்கும் மூலம் சூரியனே. இந்தப் பூமண்டலத்துக்கு அவனே பகவான்.

சூரியனை வழிபட்டு மங்களம் பொங்க வேண்டும் என்று பிரார்த்தித்தால் மட்டும் போதாது என்பதை தமிழர்கள் உணர்ந்திருந்தார்கள். மங்களம் பொங்க மக்கள் உழைக்க வேண்டும் என்பதைச் செயலில் காட்டினார்கள். தேகம் பொய்யல்ல என்று கண்டறிந்தத் தமிழர்கள் உடலுக்கு ''மெய்'' என்று பெயர் வைத்து உணரவைத்தார்கள். மெய் சோர்ந்தால் உயிரும் அழிந்துவிடும் என்கிற சுகாதார சாஸ்திர தத்துவத்தைக் கண்ட திருமூலர் 'உடம்பார் அழியின், உயிரார் அழிவர்' என்று உடம்புக்கும் உயிருக்கும் ஒரு முடிச்சுப் போட்டுக் கட்டிவிட்டார்.

'உண்டி கொடுத்தவர் உயிர் கொடுத்தவர்' என்பது தமிழ்நாட்டின் பழமொழி. இதனால் சாப்பாடே முக்கியம் என்பது அர்த்தமல்ல, பஞ்சமும் பட்டினியுமின்றி நாட்டு மக்கள் நலம் பெற்று வாழவேண்டும் என்பதேயாகும். வளமான நாட்டில் தான் முயற்சியும் முன்னேற்றமும் உண்டு.

இந்த உழைப்புக்கு உதவுபவன் சூரியன். ஆதிபகவன் என்பது சூரியனைத்தான் என்றும் சொல்லப் படுகிறது. வள்ளுவர் சூரியனைத்தான் மனதிற் கொண்டு ''ஆதிபகவன் முதற்றே உலகு'' என்றார். சிலம்புச் செல்வம் தந்த இளங்கோவடிகள் 'ஞாயிறு போற்றுதும்' என்று தன் காவியத்தைத் தொடங்கினார்.

சூரியன் ஒரு ராசியை விட்டு மற்றொரு ராசிக்கு வந்து சேருவதை சங்கராந்தி, சங்கிரமணம் என்று சொல்லுவர். தனுர் ராசியைவிட்டு மகர ராசிக்குச் சூரியன் வந்துசேரும் காலமாக இருத்தலின் இக்காலம் மகர சங்கிராந்தி எனப்படும்.

இப்பொங்கல் விழா உழவருக்கும் நிலக்கிழாருக்குமிடையே நிலவிவரும் உறவைக் காட்ட ஒரு சந்தர்ப்பமாகும். பண்டைநாளில் உழவோருக்கும் உழுவிப்போருக்குமிடையே நல்லவிதமான உறவு இருந்தது; பூசல் இல்லை. தைத்திங்கள் முதல் நாளில் உழவோரும் உழுவிப்போரும் சேர்ந்து தங்கள் உழவுத்தொழிலுக்குப் பயன்பட்ட கதிரவனை வழிபடுகின்றனர். உழுபவர்களுக்கு நிலச் சொந்தக்காரர்கள் பரிசுகள் மறுநாளுக்கு மறுநாள் வழங்குவர். இவைகளைப் பெற முதலாளியைக் காண வருவதால் இது ''காணும் பொங்கல்'' என்றும் அழைக்கப் படுகிறது. ★

# மார்கழியின் மாண்பு

திரு. ஆர். ஜி. பாபுஜி, பி. ஏ.,
திருவள்ளூர்.

"மாதங்களில் உகந்ததும் எனக்குஏற்புடையதுமானதும் ஆகிய மாதம் மார்கழிதான் என்று பகவான் கண்ணனே கீதையில் கூறுவதாய் பாடல்கள் பல அமையப் பெற்றுள்ளன. அத்தகைய மார்கழிக்கும் மங்கையர்க்கும் மாண்புகள் சேர்க்கும் விதமாய் நோன்புகள் தொடங்கிடும் காலமிது.

## விடியற்காலை

ஞாயிறின் வரவிற்கு வந்தனம்கூறி வரவேற்க இயற்கையன்னை தினமும்



பனிப்புகைப் படலம் எழுத, அதற்கு நாங்கள் சற்றும் சளைத்தவர்கள் அல்ல என்பதற்கு ஏற்ப தெருக்களில் இருபுறமும் கோலமிட்டு அதன் மீது பூசணிப் பூக்களை வைத்திடும் போதினில்... இன்றும் கூட அந்தக் கோதை ஆண்டாள்... அவள் ஆடி அசைந்து வந்து நமக்கு காட்சி தருவதைப் போன்ற பிரமை யுணர்வுடன் பக்தியுணர்வும் ஏழுப்பும் மார்கழி மெய்ச்சிலிர்க்கவைக்கும் மாதமாகும்

## மார்கழி மாதத்தில் மங்கையர்கள் நோன்பு ஏன்?

"ஒரு பெண்ணிற்கு கல்வி அறிவு அளித்தல் மூலம்—ஒரு தலைமுறைக்கே



கல்வி அளித்தது போலாகும்" என்ற பழமொழிதான் இங்கு நினைவு கூறத்தக்கது ஆகும்

எனவே "தலைமுறை" சீரும்சிறப்புமாக வரவேண்டுமெனில் மங்கை



யர்கள் மாண்புடன் இருத்தல் வேண்டும் என்பதே இயல்பு. தன்னைக் கைத்தலம் பற்ற வருபவனை நல்லவனாக – வல்லவனாக– அறிஞனாக சிறந்த கலைஞனாக எனக்கு கொண்டு வந்து சேர்ப்பாய் என்றே மங்கையர்கள் 30 நாட்களும் மனதில் நினைத்து அதிகாலையில் சில்லென்ற நீரில் குளித்து மனதை ஒருமுகப்படுத்தி – அந்த மாயக் கண்ணனிடம் வேண்டுவதாகத்தான் நாம் கொள்ளல் வேண்டும். ஆனால் அந்தப் பிடிவாதக்காரி கோதையின் – நீயேதான்



எனக்கு வேண்டும்-என்று அந்த அரங்கனையே ஆட்கொள்ள ஆசைபட்டாளே – அவளுடைய துணிச்சலில் ஆசை இருந்ததே தவிர அகம்பாவம் இல்லை. ஆண்டவனையே ஆட்கொண்ட ஆண்டாள் – அவள்; அங்கு பக்திக்குத் தான் முதலிடம் – வெறிக்கு அல்ல; அது ஆத்மார்த்த அன்பு— அதனால்தான் அவள் இன்னிசையாய் பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை.

அவளுக்கு வேறு சிந்தனையில்லை; சதா அந்த கண்ணன்தான். எனவே தான் தான் சூடி அளித்த திருத்துழாய் மாலையை அவனும் மனமுவந்து ஏற்றுக் கொண்டான்.



ஆண்டாள் தெய்வீகமானவள் — இல்லையென்றால் அந்த திருவரங்கனை நினைத்து கனவு கண்டு வாரணமாயிரம் பாடுவாளா?

அந்த வாரணமாயிரத்தில்:

மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாம நிரை தாழ்ந்த
பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதனன்
வந்து என்னைக்-
கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன்
தோழி நான்.

இங்கு தமிழுக்குச் செழுமையான பாடல் ஒன்று கிடைத்தது. அத்துடன் அவளுடைய ஆதங்கம்கற்பனைகளாய் வெடிக்கும் போது அடடா... உண்மையாகவே அந்த திருவரங்கன் அவளை ஏற்றுக்கொண்டிருப்பான்.



அந்த ஆண்டாள் - கண்ணனை ஆண்டதின் பேராய் பெண்ணினம் மாண்புற மார்கழி அமைந்தது. மார்கழியின் நோக்கமே நோன்புகள் ஆகும்.

பிரார்த்தனைகள் எல்லாம் சலுகைகள் அல்ல. மனதினை அடக்கி வைராக்கிய உணர்வினை வளர்ப்பதே நோன்பின் நோக்கம் ஆகும்.

எனவே வைராக்கிய உணர்விற்காக வாவது நோன்பினை மேற்கொள்வோம்.

மார்கழியின் சிறப்பு, மங்கையர்
நோன்புகள் ஆகும்.



# மாலுக்குகந்த மங்கை

திரு. இரா. இராஜகோபாலன்,
பொள்ளாச்சி.




அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகனாக விளங்குகின்ற திருவேங்கடமுடையான் சந்நிதியில் எந்நாளும் திருநாளே. "அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்து இயங்கும் படி" அவனது வாயிற்படி என்பார் குலசேகர ஆழ்வார். மற்றைய திவ்விய தேசங்களுக்கு இல்லாத பல சிறப்புக்களை உடையது திருமலை. "திருவேங்கட மாமலை ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே" என்று அறுதியிட்டு உரைப்பார் நம்மாழ்வார். மலைகுனிய நின்ற பெருமானை யும் நினையாமல் இந்த மலை ஒன்றையே தொழுதாலும் நமது பாவங்கள் நீங்கும் என்பது இதன் பொருளாகும்.

"அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறையும் மார்பன்" ஸ்ரீநிவாசன். அத்தகைய அகலாத பிராட்டியும் வாரந்தோறும் சிறிது நேரம் பெருமானின் வல மார்பைவிட்டு இறங்குகிறாள். வெள்ளிக் கிழமை தோறும் திருமஞ்சன வேளையில் தாயார் சற்றே அகலும் போது பெருமாள் திருமுன்பு நாச்சியார் திருமொழி அநுசந்திக்கப் படுகிறது. "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்றவள் அல்லவா சூடிக் கொடுத்த சுடர்க் கொடி! "வேங்கடவற்கு என்னை விதி" என்று காமதேவனை வேண்டியவள் ஆண்டாள். ஆதலால் பிராட்டியின் பிரிவின்போது பெருமாளைவிடாமல் கோதையின் பாமாலை ஆட்கொள்கிறது.

சிற்றஞ்சிறு காலையில் மூன்றுமணி. வேங்கடவன் திருமுன்பு பள்ளியெழுப்பும் பாடல்கள் கேட்கின்றன. காட்டில் உறங்கும் இராமபிரானை வைகறைப் போதில் துயில் உணர்த்துகிறார் விசுவாமித்திரர். "கௌசல்யா சுப்ரஜா ராமா" என்று தாயின் பெயருடன் தாமரைக் கண்ணனைத் துயில் உணர்த்துகிறார் முனிவர். இந்தச் சுலோகம் வால்மீகி இராமாயணத்தில் வருகிறது. இந்த மேலான சொற்களுடன் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் தொடங்குகிறது. இதைத் தொடர்ந்து ஸ்தோத்திரம், பிரபத்தி, மங்களா சாசனம் ஆகியவை

யும் கம்பீரமாக ஒலிக்கின்றன. விஸ்வரூப தரிசனத்திற்கு முன்பாக இந்த தேவகானத்தைக் கேட்டுக் கண்ணீர் பெருக்கிக் கொண்டே அங்கப் பிரதட்சிணம் செய்வது மறக்க முடியாத அநுபவம்.

பகவான் கண்ணபிரான் கீதையில் ''மாதங்களில் நான் மார்கழியாக இருக்கிறேன்'' என்று சொன்னான். இந்த கீதாசாரியன் வழிபாட்டுக்குப் பீடமாக உள்ள மார்கழி தனுர் மாதம் ஆகும். வேங்கடவன் சந்நிதியில் இந்த மாதத்தில் ஒரு மாறுதலைக் காணலாம். சுப்ரபாதத்திற்குப் பதிலாக பிரம்ம முகூர்த்தத்தில், "கதிரவன் குண திசைச் சிகரம் வந்தணைந்தான்'' என்று தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருப்பள்ளி எழுச்சி முழங்குகிறது. இதைத் தொடர்ந்து ஆண்டாளின் பாசுரங்கள் ஆனந்தத் தேனாகப் பாய்கின்றன. ''மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்', எனத் தொடங்கி முப்பது திருப்பாவை பாசுரங்களும் சேவிக்கப்படுகின்றன. ''எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் எம்பாவாய்'' என்று நிறைவு பெறுகின்றன. "உயர்வற உயர்நலம் உடையவன்'' என்று இறைவனுக்கு இலக்கணம் கூறிய தமிழில் தன் பெருமையைக் கேட்கிறான் வேங்கடவன். அவன் "பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டல்'' அல்லவா?

ஆழ்வார்களின் பாசுரங்கள் பகவானுக்கு மிகவும் உகப்பானவை. ஆனால் அவையும் ஆண்டாளின் பாசுரத்திற்கு முன் நிற்க முடியுமா? பெருமாளின்மீது கண் எச்சில் படுமே என்று பல்லாண்டு பாடிய பெரியாழ்வாரின் பாசுரங்களைக் காட்டிலும் அவர் வளர்த்த மகளுடைய மாலையை அவன் விரும்பியவன் அல்லவா? தந்தையாம் ஆழ்வார் தொடுத்துச் சமர்ப்பித்த புதிய பூமாலையைக் காட்டிலும், மகள் கோதை சூடிக் கொடுத்தமாலையையே விரும்பியவன் ஆயிற்றே! அவன் ''சூடிக் களைந்த துழாய் மலர்மாலை சூடும் தொண்டர்கள'' ஆழ்வார்கள். ஆனால் எம்பெருமானோ அவள் சூடிக் கொடுத்த மாலைக்கு உகப்பவன். பரகால நாயகியாம் திருமங்கை மன்னனும், பராங்குச நாயகியாம் சடகோபனும் கோதை நாயகியின் பாவனைக்கு முன் நிற்க முடியுமா? அவர்கள் காதல் வெறும் நடிப்பே. இவளது காதலன்றோ இயல்பானது! ''புருஷன் புருஷனைக் ஸ்நேகிப்பதிலுங் காட்டில் ஸ்திரீ புருஷனைக் கண்டு ஸ்நேகிக்கை பள்ளமடையாகையாலே, ஆழ்வார்களிற் காட்டில் எம்பெருமான் பக்கல் பரம பக்தியுடையளான ஆண்டாள்'' என்று பெரிய வாச்சான்பிள்ளை தமது திருப்பாவை வியாக்யானத்தில் கூறுகிறார். ஆம்! தண்ணீர் மேட்டிலிருந்து பள்ளத்திற்கு இயல்பாகப் பாய்வது போல், பெண்ணாகிய இவள் உள்ளத்தில் புருஷோத்தமனாகிய எம்பெருமான்பால் தோன்றுவது தானே இயல்பான காதல்!

கோதையின் கல்யாணக் கனவு தான் எவ்வளவு கோலாகலமானது! ''வாரணம் ஆயிரம் சூழ வலம் வந்து'' நிற்கிறான் ஸ்ரீமந் நாராயணன். கவிதையே கம்பீரமாக நடைபோடுகிறது. ஆயிரம் யானைகள் சூழ்ந்து வர, வாத்திய கோஷம் முழங்க, எதிரே பொன்னாலாகிய பூரண கும்பங்களுடன், நகரமெங்கும் தோரணங்களால் அலங்கரித்து மாப்பிள்ளை அழைப்பு நடைபெறுகிறது. பாளைகளும், பாக்கு மரங்களும் கொண்டு அலங்கரிக்கப்பட்ட பந்தலின்கீழே நாளை திருமணம் என்று நிச்சயதார்த்தம் நடக்கிறது. இந்திரன் முதலான தேவர்கள் எல்லாம் ஆண்டாளை மணப்பெண் என்று பிரகடனம் செய்ய, நாத்தனார் துர்க்கையாகிய அந்தரி கல்யாணப் புடவையையும் மலர்களையும் சூட்டுகிறாள். உத்தம பிராமணர்கள் இருவர்க்கும் கங்கணம் கட்டுகிறார்கள். பாவையர் மங்கள தீபங்களும் பொற்கலசங்களும் ஏந்தி எதிர்கொள்ள, கண்ணபிரான் ராஜ கம்பீரமாக நடந்து வருகிறான். ''மத்தளம் கொட்டவரி சங்கம் நின்றூத'' முத்து மாலைகள் தொங்கும் பந்தலின்கீழே எம்பெருமான் கோதையின் கைத்தலம் பற்றுகிறான். இருவரும் அக்னியை வலம் வருகிறார்கள். அவன் திருக்கையால் பற்ற அம்மி மிதிக்கிறாள். தமையன்மார் பொரிமுகம் தட்டுகிறார்கள் குங்குமமும் சந்தனமும் பூசி, யானை மேல் கண்ணனுடன் ஏறி மங்கல வீதியில் சென்று மஞ்சள் நீராடுகிறாள் கோதை நாச்சியார். திருமணத்தின் முக்கிய நிகழ்ச்சிகளையெல்லாம் அநுபவித்து அநுபவித்து இந்தப் பாசுரங்கள் பேசுவதைக் காணலாம். ''கருப்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ, திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ?'' என்று வெண் சங்காகிய பாஞ்சசன்னியத்தைப் பார்த்து மாதவனின் வாய்ச்சுவையும் மணமும் எப்படிப்பட்டவை எப்படிப்

பட்டவை எனக் கேட்கிருளே! இதை இவளன்றி வேறுயார் கேட்கமுடியும்!

''சம்சாரத்தில் உறங்குகின்றவர் களை எழுப்பி எம்பெருமான் தானே தன்னைக் காட்டக் கண்டார்கள் ஆழ்வார்கள். இவள் தானே சென்று எம்பெருமானை எழுப்பித் தன் குறையை அறிவித்தாள். ஆகை யாலே அவர்களிலும் இவள் விலக்ஷணை.'' என்பார் வியாக்யானச் சக்கரவர்த்தி பெரிய வாச்சான் பிள்ளை. ''மயர்வற மதிநலம் அருளப் பெற்று அவன் அருளாலே அவன் தாள் வணங்கினர் ஆழ்வார்கள். இவளோ ''செங்கண் சிறிச்சிறிதே எம்மேல் விழித்து, சீரிய சிங்கம் போல் மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப் பட்டு சீரிய சிங்காதனத்திலிருந்து அருள் செய்க'' என்று தன் அபி லாஷைகளை நிறைவேற்றுமாறு கண் ணனிடம் விண்ணப்பம் செய்கிருள். மார்கழி நீராடத் தோழிகளை எழுப்பி அழைத்துச் செல்லும் கோதை நீர் நிலைக்கா போகிருள்? அவள் நோக்கம் என்ன? அவள் எம்பெருமானிடம் கேட்கும் பறை என்ன? ஓங்கி உல களந்த உத்தமன் அருளால், தீங் கின்றி நாடெல்லாம் திங்கள் மும் மாரி பெய்ய வேண்டும். ஓங்குபெரும் செந்நெல் விளைய வேண்டும். குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள் பெருக வேண்டும். உலகில் வாழ மழை பெய்திடல் வேண்டும். அவனை வாயினல் பாடி மனத்தினல் சிந் திக்க, நம்பிழைகள் தீயினில் பட்ட தூசாக மறையும். தூயோமாய்ச் சென்று அவன் துயில் எழப்பாடினல், எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் அவனையே அடைந்து அவனுக்கே ஆட்செய்து உலகியல் பற்றுக்களை நீங்கலாம் என்பதும், எங்கும் அவன் திருவருள் பெற்று இன்புறலாம் என் பதும் நோக்கங்களாகும்.

உலக பந்தமும் உறவு முறையும் வேண்டாம் என்று துறவறம் பூண்ட வர் ஸ்ரீ ராமாநுஜர். அவருக்கே பற்றை ஊட்டிய பெருமை ஆண் டாளுக்கு உண்டு! ''பற்றுக பற்றற் ருன் பற்றினை, அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு'' என்பதை அறியாத வரா எதிராசர்? அவரையே பாசம் மிகுந்த அண்ணன் ஆக்கியவள் அல்லவா கோதை! ''நம் கோயில் அண்ணர்'' என்று ஆண்டாளின் அர்ச்சா வடிவம் (விக்கிரகம்) உடை யவரைப் போற்றியது என்பர். மாலிருஞ்சோலை நம்பிக்கு இவள் விரும்பியவாறு நூறு தடா நிறைய அக்கார அடிசிலும், வெண்ணெயும் நெய்வேத்தியம் செய்ய எம்பெரு மானுர்க்குத் தோன்றியதே! தங்கை யின் விருப்பத்தை நிறைவேற்றிச் சீர்வரிசை செய்த தமையனுக அல்லவா உடையவர் மாறிவிட்டார்! திருப்பாவை ஜீயர் என்றே இவரைப் பிறர் அழைப்பதில் பேரானந்தம் அடைந்தவர் ஆயிற்றே இவர்! மூந் நூறு ஆண்டுகள் மூத்தவளாகிய கோதைக்கு, பிற்காலத்தில் அவ தரித்த உடையவர் தமையன் ஆனது ஒரு விந்தையான உறவு!

ஆண்டாளின் பெருமையைப் பேச ஆயிரம் நாவுடைய ஆதிசேஷனுக்கும் ஆற்றல் போதாது. ஏன்! அவளை மணந்த அழகிய மணவாளனுக்கே ஆற்றல் போதாது எனலாம்! பரமாத் மாவின் பெருமையைப் பேச ஆற்றல் இன்றி மெலிந்த வடமொழி வேதம் அவன் பின்னே ஏங்கிச் செல்கிறது. ''உயர்வற உயர்நலம் உடையவன்'' என்று அவனை உள்ளவாறு உரைப் பதில் வெற்றி பெற்ற தமிழ்மொழிப் பிரபந்தம் திருவீதி உலாவரும் பெரு மானின் உற்சவ மூர்த்திக்கு முன்னே முழங்கிச் செல்கிறது. நாலாயிரத் திவ்யபிரபந்தம் திராவிட வேதம் என்ருல், ஆண்டாளின் திருப்பாவை வேதாந்த மாகிய உபநிடதம் என்பர் பெரியோர். நாலாயிரம் பாடல் களாகிய இருபத்து நான்கு பிரபந் தங்களையும் சேவிக்க முடியாவிடினும் பாதகமில்லை. திருப்பாவை முப்பது பாசுரங்களே நம் பாவங்களைப் போக்கிப் பரமனின் பாதங்களைக் காட்டிக் கொடுக்கும் என்கிருர் வேதப்பிரான் பட்டர்.

'' பாதகங்கள் தீர்க்கும் பரமனடி
காட்டும்
வேத மனைத்துக்கும் வித்தாகும்-
கோதைதமிழ்
ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானி
டரை
வையம் சுமப்பதும் வம்பு''

திருப்பாவையை அறியாதவரை உலகம் தாங்குவதே வம்பு என்ற இந்த வெண்பாவுக்கு இரண்டு வித மாகப் பொருள் சொல்வார் காஞ்சி ஸ்ரீ அண்ணங்கராச்சாரிய சுவாமிகள். ஒருபொருள்:- கோதை தமிழாகிய பாவைப்பாட்டு நமது பாதகங்களைத் தீர்க்கும்; அப்பாட்டு பரமனது அடி களைக் காட்டும்; அப்பாட்டு வேத மனைத்துக்கும் வித்தாகிய உபநிடதம் போன்றது. மற்ருெருபொருள்:- பாதகங்கள் தீர்ப்பவன் பரமன்; அவன் அடி காட்டுவது வேதம்; அதற்கு ஒரு வித்தாகும் இத்தமிழ்ப் பாசுரம். வேதத்தின் வித்து என்ருல் 'ஓம்' என்ற பிரணவம் என்றும் பொருள்படும்.

இவ்வாறு சிறப்பான சங்கத்தமிழ் மாலை முப்பதும் பாடிக் கொடுத்தும் பூமாலை சூடிக் கொடுத்தும் அரங் கனின் இதய அரங்கிலே இடம் பெற் றவள் கோதை. வேங்கடவனுக்கு எண்ணற்ற பொருள்களை வாரிவழங் கிய விஜயநகரத்தின் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர் தெலுங்கு மன் னனே ஆயினும், இந்தத் தமிழ்ப் பாமாலை பாடிய பாவையைப் போற்றி 'ஆமுக்த மால்யதா' என்ற காவியமே பாடினுன் என்ருல், இவள் பெருமைக்கு அளவேது! நாமும் ஆண்டாளின் திருவடிகளைத் தலையால் வணங்கி, வாயினல் பாடி, மனத் தினல் சிந்திப் போமாக.

'' திருவாடிப் பூரத்திற் செகத்துதித்
தாள் வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினுள்
வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்
பிள்ளை வாழியே
பெரும் பூதூர் மாமுனிக்குப்
பின்னுனுள் வாழியே
ஒரு நூற்று நாற்பத்து மூன்றுரைத்
தாள் வாழியே
உயரரங்கர்க்கே கண்ணி யுகந்தளித்
தாள் வாழியே
மருவாருந்திருமல்லி வளநாடி
வாழியே
வண்புதுவை நகர்க் கோதை மலர்ப்
பதங்கள் வாழியே.''

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



(8-ம் பக்கத் தொடர்ச்சி)

ஸ்ரீமத்பாகவதத்தில் இந்தநோன்பு விசேஷித்துக் கூறப்படுகிறது. கோகுலத்துக் குமரிகள் ஹேமந்த ருதுவின் (பனிக்காலத்தின்) முதல்மாதத்தில் (அதாவது மார்கழி மாதத்தில்) காத்யாயனீ பூஜை என்னும் விரதத்தைத் தொடங்கி நடத்தினார்கள். அருணோதயத்தில் எழுந்து யமுனா நதியில் மூழ்கி ஈர மணலால் அம்பாளின் பாவையை அமைத்துப் பூஜை நடத்தினர்.

'' காத்யாயனி மஹாமாயே மஹா
யோகின் யதீச்வரி।
நந்தகோப ஸுதம் தேவீ பதிம்
மே குருதே நம:॥ ''

என்று பிரார்த்தித்து, கண்ணனையே தனக்குப் பதியாக அருளவேண்டுமென்று ஒவ்வொருவரும் வேண்டினர். இவர்களுக்கு ஸ்ரீ க்ருஷ்ணனுடைய அனுக்ரஹம் எவ்வளவு கிடைத்தது என்பதை நாமறிவோம்.

எனவே பனிக்கால மாதமாகிய மார்கழி மாதம் முழுவதும் தினம் விடியற்காலை ப்ரும்ம முகூர்த்தத்தில் எழுந்திருந்து நீராடி ஆடிப்பாடி ஊர்வலம் வந்து வழிபட்டால் நல்வாழ்வு வாழ வழிகோல்பவர் ஆவோம்.

இந்தப் பாவை நோன்பைப் பெண்கள் கொண்டாடுவதை ஸ்ரீமத் பாகவதம் 10 வது ஸ்கந்தம் 22 வது அத்யாயம் நன்கு விவரிக்கிறது.

1. ஹேமந்தே ப்ரதமே மாஸி நந்த
வ்ரஜ குமாரிகா:
சேருர்ஹவிஷ்யம் புஞ்ஜானா மாஸம்
காத்யாயனீவ்ரதம ॥
2. ஆப்லுத்யாம்பஸி காளிந்த்யா
ஜலாந்தே சோதிதேயருணே
க்ருத்வா ப்ரதிகருதிம் தேவீம்
ஆனர்சந் நபனஸகதிம்॥
3. கந்தைர் மால்யை: ஸுரபிபிர்
பலிபிர் தூபதீபகை:
உச்சாவசைது சோபஹார: ப்ரவாள
பலதண்டுலை:॥
4. காத்யாயனி மஹாமாயேயோகின்
யதீச்வரி।
நந்தகோப ஸுதம் தேவி பதிம் மே
குருதே நம:॥
5. இதிமந்த்ரம் ஜபந்த்யஸ்தா:
பூஜாம் சக்ரு: குமாரிகா:।
ஏவம் மாஸம் வ்ரதம் சேரு:
குமார்ய: க்ருஷ்ண சேதஸ:
6. பத்ரகாளீம் ஸமானர்சு பூயான்
நந்தஸுதப் பதி:।
உஷஸ் யுத்தாயதா கோத்ரை:
அன்நோந்யா சக்த பாஹவ:॥

நந்தனுடைய ஆயர்பாடியிலிருந்த கன்னியர் ஹேமந்த ருதுவின் முதல் மாதத்தில் ஹவிஸ்ஸை உணவாகக் கொண்டு காத்யாயனியைப் பூஜிக்கும் விரதத்தை அனுஷ்டித்தனர். அருணோதயத்தில் யமுனையில் நீராடி நீரின் அருகே மணலினால் தேவியின் உருவத்தைச் சமைத்து அருச்சித்தனர். மனமுள்ள சந்தனம், புஷ்பங்கள் சாற்றி, அருச்சித்துத் தூபதீபங்கள் காட்டி பலிகள் உபஹாரங்களாகச் சிவந்த பழங்களும் அரிசியும் கொடுத்தனர். மஹாமாயா சொரூபியும் மஹாயோஹினியும் எல்லாவற்றிற்கும் மேலானவளுமான காத்யாயனியைப்பிரார்த்தித்து நமஸ்கரித்து நந்தகோப குமாரனையே பதியாகச் செய்யவேண்டுமென வேண்டினர். ''காத்யாயனீ மஹாமாயே'' என்று தொடங்கும், மேலே காணும் மந்திரத்தை நிறைய ஜபம் செய்தனர்.

இவ்விதம் ஸ்ரீ கிருஷ்ணனையே மனதிற்கொண்டு ஒரு மாதம் விரதம் அனுஷ்டித்துப் பூஜித்தனர். அனவரதமும் க்ருஷ்ண நாமமே அவர்களின் உதடுகளில் இருந்தது.

இதையே ஒரு விரதமாகப் பக்தியுடன் கன்னியர் மேலே கூறிய விதமாக அனுஷ்டிப்பார்களாயின் கண்ணனை ஒத்த கணவனை அடைந்து நல்வாழ்வு வாழ்வர்என்பது திண்ணம்.

மாதத்தில் சிறந்தது மார்கழி — இம்மாதத்தில் செய்யப்படும் விடியற்காலை வழிபாடுகள் சகல பீடைகளைகளையும் அகற்றி இன்ப வாழ்வு தரும் என்பது உறுதி. மனம் தெளிவுறும்: முகத்தில் தேஜஸ் பெருகும், பாக்ய லக்ஷ்மி பரிந்தணைப்பாள்.

''ஏர் பிடித்தவன் என்ன செய்வான்! பானை பிடித்தவள் பாக்யமே பாக்யம்'' என்பது ஒரு தமிழ்ப்பழமொழி. கட்டிய கணவன் நல்வாழ்வு வாழ குடும்பம் வளம்பெறும். வாய்க்கும் கணவனும் சிறந்தவனாக வர வேண்டும். வேலைக்குச் செல்லும் பெண்களாயினும் நல்லதொரு கணவன் அமையவேண்டாமா! காலம் செல்லும் போக்கில் இல்லற இன்பம் இல்லாளின் கையிலேயேஇருக்கிறது. எனவே இக்கட்டுரையைப் படிக்க நேரும் ஒவ்வொரு வீட்டிலும் மார்கழி மாதத்தில் பெண்டிர் அதிகாலையில் எழுந்து தீபமேற்றி, வாசலுக்குச் சாணமிட்டு மெழுகி, கோலமிட்டு, அதில் சாணம் வைத்து அதன் மீது ஒரு பரங்கிப் பூவை வைத்துப் பின் இறைவழிபாடு செய்து இனிய பொங்கல் நைவேத்யம் செய்து,எல்லோரும் உண்டு குறையற்ற வாழ்வு வாழ வழி காண வேண்டுகிறேன். ஆடவரும் அருணோதயத்தில் முழுகி, இறைவழிபாடு, வீதி பஜனை முதலியவைநடத்தி நல்வாழ்வுக்கு அடிகோலுங்கள் என வேண்டுவோம். 

## கொடுத்து வைத்தவன்

நாம், மிகவும் செல்வாக்காக வாழ்க்கையை அனுபவிப்பவனைக் கண்டால் ''அவனுக்கென்ன கொடுத்து வைத்தவன்'' என்று கூறுகிறோம். இந்தச் சொல்லில் ஒரு நல்ல தத்துவம் அடங்கியிருக்கிறது.

முற்பிறவியில் ஏழைகளுக்கும், கஷ்டமுற்றவர்களுக்கும், தான, தருமங்களைச் செய்தவன் இப்பிறவியில் அதன் பலனை அனுபவிக்கிறான் என்பதையே ''கொடுத்து வைத்தவன்'' என்ற சொல் விளக்குகிறது.

நன்றாக வாழ்பவர்களைப் பார்த்துக் ''கொடுத்து வைத்தவர்கள்'' என்று கூறும்போது நாமும் இப்பிறவியிலாவது கொடுத்துவைத்தால், அடுத்த பிறவியில் அனுபவிக்கலாம் என்ற எண்ணம் வரவேண்டும். அதுவே இச்சொல்லால் நமக்குக் கிடைக்கும் பயனாகும்.

கூறியவர் : திருமுருக கிருபானந்தவாரியார்.

# செய்திச் சுருக்கம்

## இலவச கண் அறுவை சிகிச்சை முகாம்

தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் திருப்பதியில் தி. தி. தே. 2-வது மற்றும் 3-வது சத்திரங்களில் இலவச கண் அறுவை சிகிச்சை முகாம் ஒன்று 14-11-80 முதல் 22-11-80 வரை நடைபெற்றது என்பது வாசகர்கள் அறிந்ததே. மற்றும் அறுவை சிகிச்சை செய்து கொண்டோர் நபர்களின் சரியான எண்ணிக்கை புள்ளி விவரங்கள் தற்போது கொடுக்கப்பட்டுள்ளன. இம்முகாமின்போது பரிசோதிக்கப்பட்ட பெண்கள் 1832, ஆண்கள் 1696. இதில் 333 நபர்களுக்கு கண் அறுவை சிகிச்சை மேற்கொள்ளப்பட்டது. இதுபோது திருப்பதியில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஏழை இல்லத்தில் உள்ள சிகிச்சை மேற்கொண்ட தொழுநோயாளர்களுக்காகமூக்குக்கண்ணாடிகளைவழங்க திருப்பதி ரோட்டரி கிளப் ரூ. 208/- வழங்கியது.

## ரூ. 5 கோடி திட்டம்

திருமலைக்குன்றுகள் பகுதியை ஒரு தேசிய ஆன்மிகக் கூடமாக மாற்றும் வகையில் ஏற்படுத்தப்பட்டுள்ள திட்டத்திற்கான ஆரம்பவிழா அண்மையில் திருமலையில் நடைபெற்றது. ரூ 5கோடி செலவில் ஆரம்பிக்கப்படவிருக்கும் 'தாவர இயற்கைச்சூழல்' திட்டத்தினை ஆரம்பித்து வைக்கும் வகையில் தி. தி. தே. மேலாண்மைக் குழுத் தலைவர் திரு. பி. நாகிரெட்டி அவர்கள் திருமலையில் இளஞ்செடி ஒன்றினை நட்டார். திருமலையில் ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி கோயிலைச் சுற்றியுள்ள பகுதிகளில் நிழல் தரும், அழகுமிக்க, வண்ணமலர்கள் பூத்துக் குலுங்கும், பழங்கள் வழங்கும் பல மரஞ்செடி வகைகளைப் பயிரிடுவதுமட்டுமன்றி, திருப்பதி நகரத்தை எதிர்நோக்கியிருக்கும் மலைச்சரிவுகளில்,குன்றுச்சரிவுகளிலிருந்து கிளம்பும் சூரிய உஷ்ணத்தைக் குறைக்கும் வகையில், பலவகையான மரங்களை வளர்க்கவும் முடிவு செய்யப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ் மேலும் 33 வனங்களும், 4 தெப்போவனங்களும் ஏற்படுத்தப்படும். இத்தெப்போவனங்கள் சமய உணர்வு கொண்ட தியான வழிவகைகள் நடத்த பயன்படுத்தப்படும். வேதங்களின் மூலம், வேத வியாக்யானங்கள், உபநிஷத்துக்கள், பகவத் கீதை போன்றன கற்களில் செதுக்கப்பட்டு, அவை மேற்கூறிய வனங்களில் பார்வைக்கு வைக்கப்படும். மேலும் இங்கு ஆன்மீக அரும்பொருட்காட்சி நிலையம் ஒன்றும் நிறுவப்படும். இவ்விழாவின் போது, தி. தி. தே. வனத்துறையின் உதவித் தலைமைக் காப்பாளர் திரு. ராஜசேகர ரெட்டி அவர்கள் இத்திட்டத்தின் சில தனிச்சிறப்புக்களை விளக்கிப் பேசினார்.

## சமயக் கல்வி நிலையம்

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் சமய கல்வி நிலையத்தின் ஆதரவில் காளஹஸ்தியைச்சார்ந்த ஸ்ரீ சுகபிரம்மாஸ்ரமம் ஸ்ரீ வித்யா பிரகாஸானந்தகிரி சுவாமியின் 99-வது கீதைச் சொற்பொழிவுத் தொடர் திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலாமந்திரத்தில் 12-12-80 அன்று துவங்கியது. இதை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட ஆரம்ப விழாவில் பங்கேற்றுப்பேசிய தி.தி.தேவஸ்தான செயலாட்சித்தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் தி. தி. தே. ஆதரவில் சுவாமிஜிக்கு தன் நன்றியைத் தெரிவித்து, நவீன கல்வியுடன் சமய கல்வியினைப்படிப்பதன் முக்கியத்துவத்தை விரித்துக் கூறினார். மேற்கூறிய சமயக் கல்வி நிலையத்தின் கூட்டுறவாளர் திரு. எஸ். நாகய்யா அவர்கள் தம் சிறப்புரையில் நிலையத்தின் பல்வேறு திட்டங்களை விளக்கிப்பேசினார். நிலையத்தின் உதவி கூட்டுறவாளர் திரு. எஸ். லக்ஷ்மணய்ய நாயுடு அவர்கள் நன்றி நவின்றார். சுவாமிஜி அவர்கள் தான் எழுதிய 'கீத மகரந்த' எனும் ஆங்கில நூலினை செயலாட்சித்தலைவருக்குவழங்கினார். இக்கீதைத்தொடர் 31-12-80 வரை நடைபெற்றது.

## மகர சங்கராந்தி

15-1-1981 அன்று திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயிலில் மகரசங்கராந்தி மற்றும் பாரிவேட்டை உற்சவம் நடைபெற இருப்பதால், அன்று திருப்பாவாடை தவிர்த்து கல்யாணோற்சவம், பிரம்மோற்சவம், ஊஞ்சல் சேவை, வாகன சேவைகள் போன்ற ஆர்ஜித சேவைகள் நடத்தப்படமாட்டா.

கண் அறுவை சிகிச்சை மேற்கொண்ட நோயாளிகளுக்கு இலவச மூக்குக்கண்ணாடிகள் வழங்கப்பட்டபோது.



# ராசிபலன்

(1-1-81 முதல் 31-1-81 வரை)

டாக்டர். டி. அர்க்கசோமயாஜி, M.A., PhD.
திருப்பதி.

## மேஷம்

(அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய)

பணவரவு, வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள், உடல்நலமேன்மை, மற்றும் சில கருத்து வேறுபாடுகள் தோன்றுவதால் கவலைக்குள்ளாதல். 14-ம் தேதிக்குப்பிறகு நல்ல சூழ்நிலை உருவாகும். தீய எண்ணங்கொண்டோர் தொல்லைகள் ஏற்படுத்த முயற்சித்தாலும், வெற்றியடைய மாட்டார்கள். 1, 9, 10, தேதிகளில் பணவரவு. 22, 23, தேதிகளில் பிரயாணமும் களைப்பும் அல்லது உடல்நலம் கெடல். 12, 13, 16, 17 தேதிகளில் பணநஷ்டம் அல்லது வீண் செலவினங்கள், 3, 4, 5, 6 தேதிகளில் கவலைகள் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல்.

## விருஷபம்

(கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய)

பிள்ளைகள் அல்லது பெண்கள் காரணமாகக் கவலைக்குள்ளாதல் அல்லது சிறிது உடல் நலம் கெடல், மற்றும் மனைவிக்கு மனமகிழ்ச்சியின்மையுங்கூட. எனினும் பணவரவு, கேளிக்கைகளில் ஈடுபடல், புதிய ஆடை ஆபரணங்கள். 3, 4, 12, 13, 20, 21 தேதிகளில் பணவரவு. 22, 23, 24, தேதிகள் நல்லன அல்ல. 25, 26 தேதிகளில் பிரயாணம். 14, 15, 20, 21 தேதிகளில் வீண் செலவினங்கள்.

## மிதுனம்

(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

இவ்ராசியில் பிறந்தவர்களுக்கு அதிக செலவுகள் அல்லது அதிக பண நஷ்டம் உண்டாகும். மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பிரயாணம், வயிற்று வலியினால் அவதியுறல். இறுதி 15 நாட்களின்போது மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை அல்லது சிறிது உடல்நலம் கெடல். 9-ம் தேதிக்குப்பிறகு புதிய ஆடை ஆபரணங்கள் குடும்பத்தில் மகிழ்ச்சி எனினும் உறவினர்கள் அல்லது பெண்கள் காரணமாக சிறிது கவலைக்குள்ளாதல். 16, 17, 20, 21 தேதிகளில் பணநஷ்டம். 1, 2 தேதிகளில் பிரயாணம். 7, 8, 9, 10 ஆகிய தேதிகளில் புதிய தொழிற் முயற்சிகளை மேற்கொளல் கூடாது.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

இம்மாதம் முழுவதும் மிகவும் சுறுசுறுப்புடனும், வெற்றிமதர்ப்புடனும் விளங்குவர். சில நபர்களால் கருத்து வேறுபாடுகள் அல்லது தீயன நடைபெறல். முதல்வாரத்தின் போது விருந்தினர் வருகை. பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல். மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது பிரயாணம் மேற்கொளல். முதல் வாரத்தின்போது நன்மையும் மகிழ்ச்சியும் ஏற்பட்டாலும், மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல். 9, 10 தேதிகள் புதிய தொழிற் முயற்சிகளுக்கு நல்லன அல்ல. 14, 15, 16, 17 தேதிகளில் மகிழ்ச்சி. 19, 20, 21, 30, 31 தேதிகளில் பிரயாணம் மேற்கொளல்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

அதிக செலவினங்கள், விருந்தினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல். மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது முயற்சிகள் வெற்றியடைதல். பணவரவாயினும் அதற்கேற்ப செலவுகளும் ஏற்படல். 14, 15 தேதிகளில் வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதி

# சந்தாதாரர்களுக்கு....

28–2–81 ம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன: தொகை அனுப்ப வேண்டிய முகவரி: The Welfare Officer, Publication Section T. T. D., TIRUPATI.

T

59, 60, 65, 75, 82, 92, 93, 154, 168, 171, 173, 174, 198, 217, 218, 227, 229, 322, 331, 340, 346, 361, 365, 366, 367, 369, 373, 547, 549, 578, 592, 594, 605, 615, 621, 625, 629, 631, 632, 636, 637, 637A, 639, 882, 1296, 1343, 1364, 1367, 1374, 1380, 1426, 1436, 1482, 1484, 1488, 1489 முதல் 1491 வரை, 1503, 1504, 1507, 1510, 1515, 2222, 2484, 2485, 2493 முதல் 2514 வரை, 2767.

யுறல். 1, 2, 20, 21, 25, 26 தேதிகளில் செலவினங்கள். 9, 10 தேதிகளில் பிரயாணம்.

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

பிள்ளைகள் அல்லது புதல்வியர் காரணமாகக் கவலைக்குள்ளாதல் அல்லது அவர்களுடன் கருத்து வேறுபாடுகள் கொளல். சிறிது உடல் நலம் கெடல். எனினும் பணவரவு, நல்ல நண்பர்கள். 11, 12 தேதிகளில் பிரயாணம் மற்றும் உடல்நலம் கெடல். 2, 3, 9, 10, 20, 21 தேதிகளில் பணவரவு, 16,17, தேதிகளில் வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல்.

## துலா

(சித்திரை 3-ம்பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

பணவரவு. புதிய ஆடை ஆபரணங்கள். மாதத்தின் முதல் 15 நாட்கள் மிகச் சிறப்பாக அமையும். மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது சிறிது உடல் நலம் கெடல். பிரயாணத்திற்கான வாய்ப்பு ஏற்படல். மதிப்புயர்தல். தீய எண்ணங் கொண்டோரால் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல். 7, 8, 12, 13, 22, 23 தேதிகளில் பணவரவு. 9, 10 தேதிகளில் பிரயாணம். 16, 17, 18 19 ஆகிய தேதிகள் நல்லன அல்ல.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

மகிழ்ச்சி, பணவரவு, எல்லாவகையிலும் வெற்றி; இறுதி 15 நாட்கள் மிகச் சிறப்பாக விளங்கும். தவறான வழியில் அல்லது பிள்ளைகள் மூலம் பணவரவு. எனினும் தீய காரியங்களில் ஈடுபடல் அல்லது தவறான நடவடிக்கை ஒன்றினை மேற்கொளல் 7, 8, 14, 15, 25, 26 தேதிகளில் பணவரவு. 12, 13 தேதிகளில் பிரயாணம், 19, 20, 21 ஆகியன நல்ல நாட்கள் ஆகா.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

கருத்து வேறுபாடுகள், தொடர்ந்து கவலைக்குள்ளாதல் அல்லது பணநஷ்டம். உற்றார்உறவினர்களுடன்பிரிவு. எனினும் கேளிக்கைகளில் ஈடுபடல். தவறான ஆலோசனைகளால் தீய நடவடிக்கைகளை மேற்கொளல். அலுவலகம்சம்பந்தப்பட்டவரை மகிழ்ச்சியிருக்காது. மாதத்தின் முதல் 15 நாட்களின் போது கடும் முயற்சிகளை மேற்கொளல். 9, 10 16, 17, 27, 28 ஆகிய தேதிகள் நன்மை பயக்கக் கூடியன. 3, 4 தேதிகளில் அதிக செலவினங்கள்.

## மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

தவறான ஆலோசனையினால் கருத்து வேறுபாடுகள் அல்லது பண நஷ்டம், சிறிது உடல் நலம் கெடல். புதிய ஆடை ஆபரணங்கள் தீய காரியங்களில் ஈடுபடுதலுக்குரிய சூழ்நிலைகள் ஏற்படல். பணவரவாயினும், அதனை விட அதிகம் செலவழித்தல். 12, 13, 15, 19, 20, 30, 31 தேதிகள் நல்லன வாகும். 22, 23, 24 தேதிகள் தீயன பயக்கும். 16, 17, தேதிகளில் பிரயாணம்.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

உற்றார் உறவினருடன் பிரிவு அல்லது பிரயாணம். பணவரவு, நல்ல நண்பர்கள். கண் சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினால் அவதியுறல் அல்லது மனைவிக்கு மன மகிழச்சியின்மை. மாதத்தின் முதல் 15 நாட்கள் சிறிது நலம் பயப்பனவாக அமையும். 5, 6, 14, 15, 20, 21, ஆகிய தேதிகள் நல்லனவாகும்; 25, 26, 27, 28, தேதிகள் ஒதுக்கப்பட வேண்டியன. 18, 19 தேதிகளில் பிரயாணம்.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

அவ்வப்போது பிரயாணம், அதிக செலவினங்கள். எனினும் கேளிக்கைகளில் ஈடுபடல். மேலும் பணவரவாயினும் அது, அதனை உடனேயே செலவழிப்பதற்கேயாம். கருத்து வேறுபாடுகள் இருப்பினும், மொத்தத்தில் மகிழ்ச்சியுடனும், வெற்றியுடனும் இவ்ராசிக்காரர்கள் விளங்குவர். 7, 8, 16, 17, 22, 23 ஆகிய தேதிகள் நல்லனவாகும். 1, 2, 3, 4, ஆகிய தேதிகள் நன்மை தரா. 20, 21 தேதிகளில் பிரயாணம்.

## மன்னிக்கவும்

இவ்விதழ் திருப்பாவை சிறப்பு இதழாக வெளிவந்திருப்பதால், சில தொடர் கட்டுரைகளும், சென்ற இதழில் வெளியிடப்பட்ட இரு கட்டுரைகளின் மீதப் பகுதிகளும் அடுத்த இதழில் தொடர்ந்து வெளியிடப்படும். ஏற்பட்ட இடை நிறுத்தத்திற்கு மன்னிக்கவும்.

-ஆர்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி
3-45 முதல் 4-30 வரை ; தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை,தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் :
12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வதுஅர்ச்சனை, ஏகாந்தம், 2வது மணி.
1-00 முதல் இரவு 9-00 வரை : **ஸர்வதரிசனம்**
1-00 முதல் 6-00 வரை : கல்யாணோற்சவம், வாகன சேவைகள், ஊஞ்சல்சேவை முதலியன
இரவு 9-00 முதல் 10-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம், இரவு மணி முதலியன.
10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக் கான ஏற்பாடுகள்.
10-30 மணிக்கு : ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை, தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபி ஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
6-00 முதல் 8-00 வரை : ஸகஸ்ர கலஸாபி ஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.
8-00 முதல் இரவு 9-00 வரை : **ஸர்வதரிசனம்**.
மதியம் :
1-00 முதல் மாலை6-00 வரை கல்யாணோற்சவம், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவை முதலியன
இரவு : 9-00 முதல் 10-00 வரை : சுத்தி,இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன
10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.
10-30 மணிக்கு : ஏகாந்தசேவை (தனி)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)
4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் 8-00 வரை : சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் மாலை 6-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : கல்யா ணோற்சவம், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.
மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவுமணி முதலியன.
இரவு 8-00 முதல் 10-00 வரை : **பூலங்கி ஸர்வதரிசனம்**
10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.
10-30 மணிக்கு : ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)
3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
5-00 முதல் 7-00 வரை : அபிஷேகம் (தனி)
7-00 முதல் 8-30 வரை : மூலவருக்கு சமர்ப்பணை முதலியன
8-30 முதல் 9-30 வரை : தோமால சேவை அர்ச்சனை (தனி)
9-30 முதல் 10-00 வரை : 2வது மணி, பலி, சாத்துமுறை,
10-00 முதல் இரவு 9-00 வரை : **ஸர்வதரிசனம்**
1-00 முதல் மாலை 6-00 வரை : கல்யாணோற்சவம் வாகன சேவைகள், ஊஞ்சல் சேவை முதலியன,
9-00 முதல் 10-00 வரை : சுத்தி, இரவு கைங்கர் யங்கள் இரவு மணி முதலியன.
இரவு : 10-00 முதல் 10-30 வரை : சுத்தி ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
10-30 மணிக்கு : ஏகாந்தசேவை (தனி)

Regd. No. H/TRP/12 தனிப்பிரதி 50 காசு

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

## 1981-ம் ஆண்டுக்குரிய முக்கிய இந்து சமய விழாக்கள்

**ஜனவரி**

13 போகி
14 பொங்கல்
15 சாவித்ரி கௌரி விரதம்
15 காமாட்சி தேவி சந்தனோற்சவம்
20 ராமகிருஷ்ண தீர்த்த முக்கோட்டி

**பிப்ரவரி**

11 ரதசப்தமி
12 மாத்வ நவமி
14 திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில் தெப்போற்சவம்
18 குமார தாரா தீர்த்த முக்கோட்டி

**மார்ச்**

4 மகா சிவராத்திரி
16 திருமலையில் தெப்போற்சவம் ஆரம்பம்
25 நாகலாபுரம் தெப்போற்சவம் ஆரம்பம்

**ஏப்ரல்**

1 திருப்பதி ஸ்ரீ கோதண்ட ராமசுவாமி கோயில் பிரம்மோற்சவம் ஆரம்பம்
5 தெலுங்கு வருடப்பிறப்பு, திருமலையில் ஆஸ்தானம்
13 ஸ்ரீ ராமநவமி, தமிழ் வருடப்பிறப்பு
16 திருமலையில் வசந்தோற்சவம் ஆரம்பம்
17 திருமலையில் வெள்ளித்தேர்
19 நாகலாபுரம் பிரம்மோற்சவம் ஆரம்பம்

**மே**

11 திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி கோயில் பிரம்மோற்சவம்
12 திருப்பதி கங்க ஜாத்ரா
17 நாராயணவனம் பிரம்மோற்சவம் ஆரம்பம், நரசிம்ம ஜெயந்தி
28 அனும ஜெயந்தி

**ஜூன்**

13 திருச்சானூர் தெப்போற்சவம் ஆரம்பம்

**ஜூலை**

7 ஸ்ரீநிவாஸ மங்காபுரம் ஸாக்ஷாத்கார வைபவம்
16 திருமலையில் ஆணிவார ஆஸ்தானம்
17 வியாஸ பூர்ணிமா

**ஆகஸ்ட்**

5 கருட பஞ்சமி
11 திருமலையில் பவித்ரோற்சவம் ஆரம்பம்
14 வரலட்சுமி விரதம்
16 காயத்ரீ ஜெபம்
23 கோகுலாஷ்டமி

**செப்டம்பர்**

2 விநாயக சதுர்த்தி
13 அனந்த பத்பனுப விரதம்
27 மகாளய அமாவாசை
30 திருமலையில் பிரம்மோற்சவம் ஆரம்பம்

**அக்டோபர்**

5 சரஸ்வதி பூஜை
6 துர்காஷ்டமி
26 நரக சதுர்த்தி
27 தீபாவளி, காவேரி நதி புஷ்கரம் ஆரம்பம்

**நவம்பர்**

7 நாராயணவனம் தெப்போற்சவம்
9 சக்ரதீர்த்த முக்கோட்டி
23 திருச்சானூர் பிரம்மோற்சவம் ஆரம்பம்

**டிசம்பர்**

1 திருச்சானூர் பஞ்சமி தீர்த்தம்
2 கந்த சஷ்டி
10 கார்த்திகைத் தீபம்
11 கபிலதீர்த்த முக்கோட்டி
15 தனுர் மாதம் ஆரம்பம் (காலை 2-50க்கு துவக்கம்)

**'ஸப்தகிரி' வாசகர்களுக்கும், விற்பனைப் பிரதிநிதிகளுக்கும், எழுத்தாளர்களுக்கும் எங்களுடைய உளங்கனிந்த பொங்கல் நல்வாழ்த்துக்கள்.**